


ஆமீலிதாக்ஷ மதிகம்ய முதா முகுந்த
மாநந்தகந்த மநிமேஷமநங்கதந்த்ரம் |
ஆகேகரஸ்திதகநீநிகபக்ஷ்மநேத்ரம்
பூத்யை பவேந் மம புஜங்கஶயாங்கநாயா : ||

ஹே லக்ஷ்மி தேவியே! ஸ்ரீ நாராயணன், மன்மதனை விருத்தி செய்கிறதாயும், சுக விசேஷத்தை பெருக்கிறதாயுமிருக்கிற தங்களது கடாக்ஷாமிருதத்தில் முழுகி ஆதிசேஷ தல்பத்திற் படுத்து நிரசதியமான சுகத்தை அனுபவிக்குங்கால் அவரது இரண்டு கண்களும் தானுகவே மூடிக்கொண்டு விடுகின்றன. அப்பொழுது எந்த தங்களது கடாக்ஷமானது எவ்வித தடையுமில்லாமல் இமைக் கொட்டுவதைக் கூட விலக்கி பகவானுடைய ஒவ்வொரு அவயவங்களிலும் யதேச்சமாய் சஞ்சரிக்கின்றதோ, அந்தக் கடாக்ஷமானது எனக்கு ஸம்பத்தைக் கொடுக்க வேண்டும்.

கனகதாரா ஸ்தோத்ரம்.

நவம்பர், 1985

# ஸப்தகிரி

இதழ் 6 மலர் 16

## உள்ளுறை

தனிப்பிரதி ரு. 1 வருடச் சந்தா ரு. 12



### அட்டைப்பட விளக்கம்

அட்டையில் : திருச்சானூர் பிரம்மோற்சவத்தின்போது கஜவாகனத்தில் ஸ்ரீ பத்மாவதி தாயார்.

2-வது : ஹைதராபாத்தில் தி. தி. தே. திருமண மண்டப கட்டிடத் தொகுதிக்கு ஆந்திர முதல்வர் அடிக்கல் நாட்டினார்.

3-வது : ஹைதராபாத்தில் தி. தி. தே. பிரசுரித்த சமய நூல்களை ஆந்திர முதல்வர் வெளியிட்டார்.

பின்னட்டையில் : திருமலையில் தீபாவளி.


*சிறப்பாசிரியர் :*

திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்:*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.



# உங்களுடன்....

மனிதன் மகிழ்ச்சியாகவே இருக்க விரும்புகிறான். அவ்வாறு தனிப்பட்ட ஒரு மனிதன் மகிழ்ச்சியில் திளைத்திடும்போது, அவனால் அடுத்தவனுக்குத் தீங்கு இல்லை. அவ்வாறே ஓர் ஊரும், ஒரு நாடும் மகிழ்ச்சியில் இருந்திடும் போது, அடுத்த ஊரின் மேம்பாட்டிற்கும், அடுத்த நாட்டின் நலத்திற்கும் ஊறு இல்லை. ஒருவன் மகிழ்ச்சியில் மூழ்கிடும் போது அவன் தனக்குத்தானே தன்னைச் சுற்றி வட்டம் ஒன்று போட்டுக்கொண்டு, அதற்குள்ளேயே இருந்துகொண்டு அவ் இன்ப உணர்வை அனுபவிக்கின்றான். ஆனால் அவனே துன்பத்தில் துவண்டிடும் போது தன்னை, தான் முன் போட்ட வட்டத்திற்குள் பார்ப்பதில்லை. அடுத்தவனைப் பார்க்கின்றான். அவனுடைய மகிழ்ச்சியைக்காண பொறுப்பதில்லை. தன் துன்பத்தை அவனும் பங்கேற்க விரும்புகின்றான். இத்துன்பச் சங்கிலி தொடருகின்றது. விளைவு குழப்பமும், வீழ்ச்சியும்தான்: இவற்றிற்கு அடிப்படைக் காரணம் மனிதனின் குறுகிய மனப்பான்மையும், சீரிய சிந்தனையின்மையும்தான்.

மனிதனின் இப்பலவீனமான குறைபாடுகளை மனதிற்கொண்டுதான், அன்றே நம் ஆன்றோர் பல பண்டிகைகளையும், அவற்றின் பின்னணியாக பல புராண நிகழ்ச்சிகளையும் விட்டுச் சென்றுள்ளனர். இப்பண்டிகைகளில் தலையானது-முதலானது தீபாவளியாகும். ஞானமார்க்கம் புகட்டும் தலை சிறந்த நூல்களில் எவ்வாறு பகவத் கீதை விளங்குகின்றதோ அவ்வாறே பண்புகைகளில் ஓர் உன்னதமான இடத்தை தீபாவளி வகிக்கின்றது. இடம், இனம் மொழி, வயது பாகுபாடின்றிப் பன்னெடுங்காலமாகக் கொண்டாடப்பட்டு வரும் இத்தீபாவளித் திருநாள் தேசிய ஒருமைப்பாட்டுணர்வு தழைத்தோங்கிடும் வகையிலும் விளங்குகிறது. இறைவனின், ஞானிகளின், மெய்யடியார்களின் பாதம் பட்ட, பார்வை பெற்ற புண்ணியத் தலமாகும் இப்பாரதம். அதிலும் இம்மண்ணில் ஒரு சில குறிப்பிட்ட தலங்களும், மலைகளும், ஆறுகளும் மிகவும் புனிதமாகப் போற்றப்படுகின்றன-வழிபடப்படுகின்றன. இவ்வகையில் பன்னிரு ஜீவ நதிகளில் போற்றப்படும் கங்கையும் காவிரியும் வடக்கையும் தெற்கையும் இணைக்கும் பக்திப் பாலங்களாகும். இப்புனித இன்பத் திருநாளாம் தீபாவளியன்று, விடியற்காலையின் போது எந்த நீரானாலும் அது வெந்நீரானாலும் புனிதமிகு அக்கங்கையும் காவிரியும் அதில் இருப்பதாக நம்பப்படுகிறது. ஆகவே "தைலே லக்ஷ்மீ: ஜலே கங்கா" என்ற துலாபுராணக் கூற்றுப்படி அன்று எண்ணெயில் லக்ஷ்மியையும், நீரில் அப்புனித நதிகளையும் கண்டு வழிபடுவதால்தான், "கங்காஸ்நானம் ஆச்சா" என்று ஒருவரை ஒருவர் கேட்டு மகிழ்கிறோம். ஆனால் இம்மகிழ்ச்சியின் பின்னணியில் ஒரு புராணக்கதை இருப்பதையும், அது புகட்டும் பாடத்தையும் மட்டும் மறந்து விட்டோம். தன் ஸ்பரிசத்தினால் பூமி தேவிக்குப் பிறந்திட்ட பிராக் ஜோதிஷபுரத்துத் தலைவனான நரகாசுரன் எனும் அரக்கனை ஸத்யபாமை துணையுடன் கிருஷ்ணன் அழித்திட்ட திருநாளே இத்தீபாவளி என்பது புராணக் கதை. ஒருவனின் அழிவு நாள் எப்படி திருநாளாயிற்று? புத்ர சோகத்தினால் தான் வருந்தினாலும், மற்றவர் வருந்துதல் மறந்து,—கொடுமைகள் மறைந்து புதுமைகள் மலரும் ஒரு புனித நாளாக இந்நாள் அமைந்திட-அந்நாளை ஒரு திருநாளாகக் கொண்டாட வேண்டும் என்று இறைவனிடம் முறையிட்டாள். இது ஒரு தாயின் தியாக உணர்ச்சியினையும், அதனால் விளையும் பரந்த மனப்பான்மையின் உயர்ச்சியையும் நமக்கு விளக்கிக்கூறும். தத்துவ ரீதியாக பார்ப்போமாயின் ஒன்பது கோட்டை வாயில்களைக் கொண்ட நகரத்தின் தலைவனான நரகாசுரனைக் கண்ணன் கொன்றது, ஒன்பது வாயில்களைக்கொண்ட இவ்வுடம்பின் உள் இருக்கும் நான் எனது என்ற தன்னல உணர்வுகளை அழித்தலின் அவசியத்தை உணர்த்துவதற்குத்தான் என்பது தெளிவாகும். இத்திருநாளின் போது வாணவெடிகளை வெடிப்பது என்பது, வெடி மருந்து இருந்தும் வெடிக்காத ஜடமான பட்டாசுகளைப் போன்ற நாம், எப்படி தீப் பட்டதும் அவற்றிலிருந்து ஒலியும் ஒளியும் பிறக்கின்றதோ, அதுபோன்றே நமது அறிவுத்திரியானது ஞானக்கனலினால் பற்றப்பட்டால் நம் உள்ளே ஆன்ம ஒளி ஒளிரப் பெற்று அப்பரமனைப்பற்றிய பேருண்மை பெரும் சத்தமாக நமது இதயத்தில் ஒலிக்கும் என்பதை விளக்கத்தான் என்று அறியலாம்.

இத்திருநாளின்போது தீபங்களை வரிசையாக ஏற்றுவது என்பது ஒரு வகை வழிபாடாகும்: தென்னகத்தை விட வடக்கில்தான் இது மிகவும் பெரிய அளவில் கொண்டாடப்படுகின்றது. சந்திரகுப்த அர்சியலிலும், அக்பர் வரலாற்றிலும் இடம்பெற்ற இத்தீபாவளித் திருநாள், பல்வேறு பெயர்களில் ஜைனர்களாலும், பௌத்தர்களாலும், கடல்கடந்து சில கீழை நாடுகளிலும்கூட பெருமளவில் கொண்டாடப்பட்டு வருகின்றது என்பது அப்பண்டிகையின் பெருமையினைப் பறைசாற்றும். எவ்வாறு அகல், எண்ணெய், திரி, சுடர் என்ற நான்கும் சேர்ந்தால்தான் ஒளி என்ற ஒன்று பெறப்படுகின்றதோ, அவ்வாறே அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கினையும் கடந்தால்தான் அப்பேரொளியினை நாம் கண்டிட முடியும். இந்த ஞான ஒளியைத்தான் "சோதி அந்தம் ஆயினும், சோதியுள் ஒரு சோதியானும்" "தூண்டா விளக்கின் சுடரனையார்" "பரஞ்சோதியே சுகவாரியே" என்று பல திருவாக்குகளின் மூலம் பல மெய்யடியார்கள் கண்டு தெளிந்து உயர்ந்தார்கள்; உயர்ந்த அந்த உத்தமர்கள் உலகுக்கு உணர்த்திய அரிய செய்திகளையும் நெறிகளையும், இவ் இன்பத் தீபாவளி பண்டிகைத் தத்துவப் பொருளுடன் கலந்து சிந்திக்கத் தலைப்பட்டால், அதுவே எதிர்காலத்தில் நாம் மகிழவும், பிறரை மகிழ்விக்கவும் வழிவகுக்கும்;

# செய்திச் சுருக்கம்



## திருமலையில் ஆந்திர முதல்வர்

அண்மையில் ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் வருகை புரிந்தார். இது போது திருமலையில் வைகுண்ட நுழைவு வாயில் ஒன்றினைத் திறந்து வைத்தார். ரூ. 8.5 கோடி செலவில் 1008 அறைகளைக் கொண்டு, 5000 யாத்திரிகர்கள் தங்கும் வகையில் புதிய தங்கு விடுதி கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டினார். பின்னர் ரூ. 75 இலட்சம் செலவில் கட்டப்பட்ட விருந்தினர் விடுதி கட்டிடத்தினைத் திறந்து வைத்தார். கருட சேவையின்போது, வழக்கம் போல் ஆந்திர மாநில அரசு சார்பில் வழங்கப்படும் பொன்னுடை ஒன்றினை வேத மந்திரங்கள் ஒலிக்க முதல்வர் அவர்கள் உற்சவர்க்கு வழங்கினார். திருப்பதி திருச்சானூர் சாலையில் ரூ. 1 கோடி செலவில் கட்டப்படவிருக்கும் திருமண மண்டபத் தொகுதி கட்டிடத்திற்கான அடிக்கல் நாட்டினார். இதன் நினைவாக வேப்பம் மற்றும் அரச மரக் கன்றுகளை நட்டார்.

## அடிக்கல் நாட்டு விழா

ஆந்திர மாநிலத் தலைநகரமான ஹைதராபாத்தில் இமயத்நகரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ரூ. 70 இலட்சம் செலவில் கட்டப்படவிருக்கும் திருமண மண்டபம் ஒன்றிற்கு ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் அடிக்கல் நாட்டினார். பின்னர் இந்நிகழ்ச்சி சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின்போது, முதல்வர் அவர்கள் தி. தி. தேவஸ்தானத்தாரால் புதிதாக பல்வேறு மொழிகளில் பிரசுரித்த 21 சமய நூல்களை வெளியிட்டார். இந்நிகழ்ச்சியில் மாநில கல்வி அமைச்சர் திரு. முத்து கிருஷ்ணம நாயுடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் திரு. எத்திராஜுராவ், தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. வி. கே. டி. வி. எஸ். ராஜு மற்றும் குழு உறுப்பினர் சிலரும் பங்கேற்றனர்.

## நன்கொடை

கல்கத்தாவைச் சார்ந்த தொழிலதிபர் திரு. மகாவீர் பிரஸாத் போத்தார் அவர்கள் தி. தி. தே. செயற்படுத்தி வரும் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான' திட்டத்திற்கென ரூ. 10 இலட்சம் வழங்கினார். இதனால் வரும் வட்டித் தொகையினைக் கொண்டு நாள்தோறும் திருமலையில் 5000 யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப் படும்.

## வெளியீடு

திருமலையில் அண்மையில் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. வி. கே. டி. வி. எஸ். ராஜு அவர்கள், தி. தி. தே. அறிமுகப்படுத்திய டாக்டர் எம். பாலமுரளிகிருஷ்ணா அவர்கள் பாடிய 'அன்னமய்யா சங்கீர்த்தனம்' மற்றும் 'அன்னமய்யா சங்கீர்த்தனாவளி', திருமதி எஸ். ஜானகி, திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் ஆகியோர் பாடிய 'அன்னமய்யா ஸ்ரீ கிருஷ்ண தத்வம்', ஜி. பாலகிருஷ்ண பிரஸாத், ஜி. நாகேஸ்வரராவ், பி. எஸ். ரங்கநாத் மற்றும் குமாரி எஸ். பி. சைலஜா ஆகியோர் பாடிய 'அன்னமய்யா-வேங்கடாத்ரி வெண்ணிலா' ஆகிய ஒலிப்பதிவு நாடாக்களை வெளியிட்டார்.

> **திருத்தம்**
>
> சென்ற இதழில் 21-ம் பக்கத்தில் கருட சேவை நடைபெறும் தேதி 18-10-85 என்பதற்குப் பதில் 17-10-85 என்று தவறுதலாகக் கொடுக்கப்பட்டுள்ளது. தவறுக்கு மன்னிக்க வேண்டுகிறோம்.
>
> ஆ-ர்.

## எரிவாயு அடுப்புகள்

திருமலையில் லட்டுகள் மற்றும் மற்றைய கோயில் பிரஸாதங்களைத் தயாரிக்க விறகுகளை எரித்துப் பயன்படும் அடுப்புகள் பல ஆண்டுகளாக பயன்படுத்தப்படுகின்றன. குறைந்து வரும் காட்டு நல வளர்ச்சியை மனதிற்கொண்டு, நவீன முறையில் எரிவாயு அடுப்புகளை இனிமேல் திருமலையில் பயன்படுத்துவதென்று எடுத்த முடிவின் எதிரொலியாக, அண்மையில் திருமலை சமையற் கூடத்தில் முதல்கட்டமாக ஐந்து எரிவாயு அடுப்புகள் அறிமுகப்படுத்தப்பட்டன.

## புதிய காவல் நிலையங்கள்

திருப்பதி-திருமலை நடைபாதையில் சென்று வரும் யாத்திரிகர்களின் பாதுகாப்பு அவசியத்தை மனதிற் கொண்டு தி. தி. தேவஸ்தானம் அவ்வழியில் மூன்று முக்கிய இடங்களில் தி. தி. தே. பாதுகாப்பு ஊழியர்களைக் கொண்ட மூன்று "காவல் நிலையங்கள்" தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டன.

# தீபாவளியும் ஸ்நானமும்

தீபாவளிப் பண்டிகையைப்பற்றிக் கூறும் "துலாமாஸ மாஹாத்ம்யம்" என்ற நூல் இந்நன்னாளில் அதிகாலையில் எண்ணெய்த் தேய்த்து ஸ்நாநம் செய்பவர்கட்கு நரகவாதனை கிடையாது எனவும், எல்லா செல்வமும் கிட்டும் என்றும், கங்கா ஸ்நானபலன் ஏற்படும் என்றும் சிவபெருமான் அருளியதாகக் கூறுகிறது. இன்று 66 கோடி புண்ய தீர்த்தங்கள் காவேரி நதியில் ஸான்னித்யமாகி இருப்பதால் இந்நதியில் ஸ்நாநம் செய்து தானம், தர்ப்பணம் செய்வதைச் சிறப்பித்துக் கூறுகிறது. இன்றைய தினம் ஒவ்வொரு வீட்டிலும் உள்ள தீர்த்தத்திலும் கங்காதேவி வசிக்க வேண்டும் என்று ஸ்ரீக்ருஷ்ணரிடம்-நரகாசுரன் வரம் பெற்று இருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன தவிரவும் தேவாசுரப் போரில் நரகாசுரனுடன் சனி பகவான் போர் புரிந்ததாகவும், பாகவதம் கூறுவதால் இன்று தைலஸ்நாநம் செய்வது சனி ப்ரீதியாகிறது.

பொதுவாக தீபாவளி தவிர மற்ற தினங்களில் அதிகாலையில் எண்ணெய்த் தேய்த்துக் கொள்ளக் கூடாது. சூர்ய உதயமாகி இரண்டுமணி நேரம் கழித்துதான் தைலம் முதலியவற்றை தேய்த்துக் கொள்ள வேண்டும் என்று தர்ம சாஸ்த்ரம் கூறுகிறது. அவ்விதம் மிக அவசியமானால் சிறிது துளசியை சேர்த்துத் தேய்த்துக்கொள்ளலாம் என்று பரிஹாரமும் கூறுகிறது. ஸ்நாநத்தைப் பற்றி பராசர ஸ்ம்ருதி, யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி முதலிய நூல்கள் பலவித அரிய விஷயங்களைக் கூறுகின்றன. வேதத்தில் கூறிய விதிப்படி ஒரு மனிதன் ஸ்நாநம் செய்து வந்தால் அவன் பாபங்கள் விலகி முக்தியடைகிறான் என்று கூறுகிறது. இவ்விதம் மூன்று நாட்கள் செய்தாலே ஏழு ஜன்ம பாபமும் விலகி மனசுத்தம், ஆயுள், சரீர சுகம் ஏற்படும் என்று பராசரர் குறிப்பிடுகிறார்.

முறைப்படி ஸ்நாநம் செய்வது எப்படி என்றால் முதலில் ஸங்கல்பம் செய்து கொண்டு வருணனை த்யானிக்க வேண்டும். ஸகல புண்ய தீர்த்தங்களையும் நாம் ஸ்நாநம் செய்யும் தண்ணீரில் ஆவாஹனம் செய்ய வேண்டும். பிறகு ஹரி நாமங்களைக் கூறிக் கொண்டு ஜலத்தில் முழுக வேண்டும். நீராடும் போது ப்ரும்மதேவரைப் பற்றிக் கூறும் அகமர்ஷண ஸூக்தத்தையோ, காயத்ரீ மந்த்ரத்தையோ, அல்லது ஓம்காரமாகிய ப்ரணவ ஜபத்தையோ செய்தபடி நீராட வேண்டும். ஸ்நாநத்திறகு முன்பும், பின்பும் ஆசமனம் (ஹரி நாமத்தை கூறி நீரைப் பருகுதல்.) செய்ய வேண்டும். ஸ்நாநம் முடிந்து தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கட்கு ஜல தர்ப்பணம் செய்ய வேண்டும். இதன் பிறகு கீழ்க்கண்ட மந்த்ரத்தால் 'யக்ஷ்ம தர்ப்பணம்' செய்து ஜலதேவதையை த்ருப்திப்படுத்த வேண்டும். அந்த மந்த்ரம் பின்வருமாறு:

"யந்மயா தூஷிதம் தோயம் சாரீரமல
ஸஞ்சயாத்
தத்தோஷ பரிஹாரார்த்தம் யக்ஷ
மாணம் தர்ப்பயாம்யஹம"

என்பதாகும். இதைக் கூறி மூன்று முறை இருகைகளாலும் தீர்த்தத்தை விட வேண்டும். பிறகு முன்புறம் தலையைக் குனிந்தபடி சில வினாடிகள் மௌனமாக நிற்க வேண்டும். அப்பொழுது தலையில் இருந்து விழும் நீரை பித்ருக்களும், உடல் மத்தியில் இருந்து வழியும் ஜலத்தை கந்தர்வர்களும், மற்ற பகுதிகள் இருந்து சிந்தும் நீரை மற்ற ஜந்துக்களும் அருந்துவதாக சாஸ்த்ரம் கூறுகிறது.

பிறகு வஸ்த்ரத்தை நான்காக மடித்து கீழ்க்கண்ட மந்த்ரத்தை கூறிப் பிழிய வேண்டும். அதாவது,

"யே கே சாஸ்மத் குலே ஜாதா
அபுத்ரா கோத்ரிணோ ம்ருதா:
தே க்ருஹ்ணந்து மயா தத்தம்
வஸ்த்ர நிஷ்பீடநோதகம்"

என்பதாகும். இதன்படி அவரவர்கள் குலத்தில் புத்ரன் இல்லாமல் காலகதி அடைந்த பித்ருக்களை த்ருப்தி செய்விக்கப்படுகிறது. பிறகு உலர்ந்த வஸ்த்ரத்தை உடுத்தி நீரில் ஒரு காலும், நிலத்தில் ஒரு காலும் ஊன்றி ஆசமனம் செய்ய வேண்டும். துணிகளைப் பிழியும் நீரை ஏதேனும் மரங்கள் செடிகளின் அடியில் விழும்படி செய்ய வேண்டும் என்று கூறுகிறது.

மிகப் பெரும் யாகங்களை செய்யும் தீட்சிதர்கள், முனிவர்கள் யாகம் முடிந்தபின், யாகம் செய்த புரோகிதர்கள், யாகத்தை நடத்திய எஜமானர், அவரது மனைவி ஆகியோர் சேர்ந்து நதிகளில் செய்யும் ஸ்நாநத்தை 'அவப்ருத ஸ்நாநம்' என்பர். இது சமயம் யாகத்தில் எஞ்சியவற்றை தண்ணீரில் எறிய வேண்டும். இத்தகைய மஹான்களின் பாதத்தை பூஜித்த தீர்த்தமே மிகவும் புனிதமானது. பொதுவாக தினமும் அதிகாலை 4 மணிக்கு நீராடுவதே சிறந்ததாகும். அப்போது நீர் நிலைகளில் உடலுக்கு நன்மை தரும் பிராண வாயு நிரம்பி இருப்பதாக ஆயுர்வேதம் கூறுகிறது: நான்கு மணி முதல், அதிகாலையில் சில நாழிகைகள் "ப்ராத காலம்" "ப்ராம்ஹ

*திரு. பி. ரவீந்திரன், பி.ஏ.,*
*திப்பிராஜபுரம்.*

# கரையேற்ற வாராயோ!

அருட்கவியரசு. இரா. சிவசுப்ரமணியன்-ஆரணி.

அடியார்க்கு அருள வழங்கும் நல்ல பெருமாளே
அவனியெலாம் தொழுதேற்றும் எம்பிரானே
ஆதிபந்தம் ஏதுமிலா ஐயனே மெய்யனே
ஆனந்தமாக மயிலேறி நீ வாராயோ? •

திருமுருகா மால்மருகா செந்தில்வாழ் திருக்குமரா
இருவினையும போக்கவல்ல வித்தகனே உத்தமனே
குருபரனே குறவள்ளி மனங்கவர்ந்த நாயகனே
விரும்பி அழைப்போரின் இடர்தீர்க்க வாராயோ

குணம் காட்டும் திருக்குமரன் வேலவனின் சேவடியை
வணங்காத முழுமூடர் பிணத்திற்கு ஒப்பாவர்
கயிலாய நாதனுக்கு உபதேசம் செய்தவனே
மயிலேறி அன்னோரை வாழ்விக்க வாராயோ?

கொள்ளியிடை அகப்பட்ட எறும்பனைய துடிதுடித்து
உள்ளத் துயராலே உழல்கின்ற பேரையெல்லாம்
வள்ளிக்கு வாய்த்த எங்கள் வள்ளலே ஆறுமுகா
புள்ளி மயிலேறி கரையேற்ற நீ வாராயோ?

முகூர்த்தம்'' என்று அழைக்கப்படும் புனித நேரமாகும். இந்நேரத்தில் நீராடியே பழங்கால முனிவர்கள் ரிஷி பதவியை அடைந்தார்கள் என்பதை பராசர ஸ்ம்ருதி,

'' ருஷீணும் ருஷிதா நித்யம் ப்ராதஸ்
ஸ்நாநாத் ந ஸம்சய:

என்று கூறுகிறது. காலையில் நீராடுவதன் உயர்வை ஒரு காஷ்மீரக் கவி தனது ''சாருசர்யா'' என்ற நூலில் விபரமாக எழுதி உள்ளார். ஸ்ரீமத் ராமாயணம் பாலகாண்டம் இருபத்தி நான்காவது ஸர்க்கத்திலும், பல புண்ய தீர்த்தங்களில் நீராடியதால் தேவர்கட்கு அதிபதியான இந்த்ரன் வ்ருத்ராசுரனைக் கொன்ற பாபத்தை தீர்த்துக் கொண்ட விபரம் கூறப்பட்டு உள்ளது.

நதிகளில் நீராடும்போது எதிர்முகமாகவும், அசைவற்ற நீரில் சூரியனை நோக்கியும், இரவில் கிழக்கு அல்லது வடக்கு திசை நோக்கியும் நீராட வேண்டும. திருமணம் ஆகாதவர்கள் ஒரு வேளைக்கு குறையாமலும், குடும்பஸ்தர்கள் இரண்டு வேளையும், சன்யாசிகள் மூன்று வேளையும் நீராட வேண்டும் என்று சாஸ்த்ரம் கூறுகிறது. சாதாரணமாக நாம் தண்ணீரில் ஸ்நாநம் செய்வதை ''வாருண ஸ்நாநம்'' என்றும், பஞ்சாட்சரத்தை ஓதி உடல் முழுதும் விபூதியை பூசிக் கொள்வதை ''ஆக்னேய ஸ்நாநம்'' என்றும், காற்றினால் பசுவின் பாத தூளி நம்மேல் படுவதை ''வாயவீய ஸ்நாநம்'' என்றும் பராசர ஸ்ம்ருதி கூறுகிறது. மேலும் தர்ப்பங்களால் ''ஆபோ ஹிஷ்டா'' முதலிய மந்த்ரங்களால் தலையில் ஜலத்தை தெளிப்பதை ''ப்ரோக்ஷண ஸ்நாநம்'' என்றும், மந்த்ர ஜபம் செய்த நீரில் நீராடுவதை ''மந்த்ர ஸ்நாநம்'' என்றும், வெய்யிலுடன் கூடிய மழையில் செய்யும் ஸ்நாநத்தை ''திவ்யம்'' என்றும் கூறுகிறது. இந்த திவ்ய ஸ்நாநத்திற்கு கங்கா ஸ்நாந பலன் என்றும் கூறுகிறது. தலையைத் தவிர மற்ற பகுதிகள் மட்டும் நனையும்படி குளிப்பதை ''கௌண ஸ்நாநம்'' என்றும், துணியால் ஈரத்தை உடல் முழுதும் படும்படி தேய்த்து துடைத்துக் கொள்வதை ''காபில ஸ்நாநம்'' என்றும் குறிப்பிடுகிறது. இவ்விருவகை நீராட்டத்தையும் உடல் நிலை இயலாமல் உள்ள நேரங்களில் மட்டுமே செய்து கொள்ளலாம்.

தினசரி காலையில் செய்யும் ஸ்நாநத்தை ''நித்ய ஸ்நாநம்'' என்றும், தீட்டு, அசௌசாரம், க்ரஹணம் போன்ற ஒரு காரணத்தை ஒட்டி செய்வதை ''நைமித்திக ஸ்நாநம்'' என்றும், புத்ரப்ராப்தி முதலிய பயன் கருதி கங்கை, ஸமுத்ரம், சங்கமுகம் போன்ற இடங்களில் செய்வதை ''காம்ய ஸ்நாநம்'' எனவும் கூறப்படுகிறது. தவிர, பூஜை, சிரார்த்தம் முதலிய கர்மாக்களுக்காக செய்வதை ''க்ரியாங்க ஸ்நாநம்'' என்றும், எண்ணெய், தைலம், மூலிகைச்சாறு இவற்றால் செய்து கொள்வதை ''மலகர்ஷணம்'' என்றும், புண்ய தீர்த்தங்களைக் கண்டதும் செய்யும் நீராடுதல் 'க்ரியாஸ்நாநம்' என்றும் கூறப்படும். இவ்விதம் புண்ய க்ஷேத்ரங்கள் அருகில் இருந்தால் அதன் எதிரில் இருக்கும் தடாகத்தை ''க்ஷேத்ர கங்கை'' என்று கூறுவது வழக்கம். புண்ய தீர்த்தங்கட்கு தீர்த்த யாத்ரை செய்ய இயலாதவர்கள் இந்த க்ஷேத்ர கங்கையில் தினம் தவறாமல் நீராடி வந்தால் எல்லாவித நன்மைகளையும் பெற்று முடிவில் வீடு பேற்றையும் அடைவார்கள் என்று ஸ்ம்ருதிகள் கூறுகின்றன. நாம் எந்த ஒரு செயலைச் செய்வதற்கும தகுந்த அருகதையை ஸ்நாநம்தான் அளிக்கிறது. எனவேதான் சாஸ்த்ரங்கள் ''ஸ்நாந மூலா. க்ரியா: ஸர்வா:'' என்று கூறுகிறது. அவ்விதம் நம்மை எந்தவித ஸ்நானங்களாலும் சுத்திகரித்துக் கொள்ள இயலாதபோது சிறிது நேரம் மனக்

திஞல் பகவானை த்யானித்தாவது தன்னை பரிசுத்தம் ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று யாக்ஞவல்க்யர் போன்ற முனிவர்கள் கூறி உள்ளனர். இதற்கு ''மானஸ ஸ்நாநம்'' என்று பெயர். இதனை பராசர ஸ்ம்ருதி,

''ஞான ஹ்ரதே த்யானஜலே
ராகத்வேஷ மலாபஹே
ய: ஸ்நாதி மானஸே தீர்த்தே ஸ யாதி
பரமாம் கதிம்''

என்று விளக்குகிறது. மானஸ ஸ்நாநம மன அழுக்குகளையும் போக்கி வீடு பேற்றை அளிக்கும் என்பதாகும். இவ்விதம் மன அழுக்குகளை கூட நீக்கும் சக்தி ''கங்கைக்கு மட்டுமே உண்டு'' என்பதாக 'கங்கா தீர்த்தே மலினமனஸ:' என்று ஸ்வராஜ்ய ஸித்திகை வல்ய ப்ரகரணம் என்ற க்ரந்தம் கூறுகிறது.

எனவே இத்தீபாவளித் திருநாளில் நாம் கங்கா ஸ்நாநப் பலனை அடைந்து, தினமும் மந்த்ர பூர்வமாக ஸ்நாநம், பூஜை, யாத்ரை செய்யும் மஹான்களைப் பணிந்து போற்றுவோம். இப்பண்டிகையன்று புத்தாடை புனைந்து பலவித இனிப்புப் பண்டங்களை நாமும் உண்டு பிறருக்கும் அளித்து மகிழ்கிறோம். இவ்விதம் பண்டிகைகள், விழாக்கள், திருமணம் போன்றவற்றில் பலவித இனிப்புக்களை வேத காலம் தொட்டு செய்து மகிழ்ந்து வந்து இருக்கின்றனர். இவைப் பற்றி தர்ம சூத்திரங்கள், க்ருஹ்ய சூத்திரங்கள் விவரிக்கின்றன. வேத காலத்தில் கோதுமை, நெய்யினுல் ஆன ''அப்யூச'' ''ஸம்யாஞ'' என்ற இனிப்பு பண்டங்களைச் சாப்பிட்டதாகக் கூறுகிறது. தற்கால (Fruit Jelley) போன்ற பழம், சர்க்கரை கலந்த இனிப்புக்களை தயாரித்ததற்குச் சான்றுகள் உள்ளன. தவிர அனலில் தயாரித்துத் தேனில் ஊற வைக்கப்பட்ட அடைகள்போல் சில உணவுகள் செய்தனர். இவைகட்கு ''ஸ்வஸ்திகம்'' ''ஸந்த்யாவர்த்தகம்'' என்று பெயர். இராமாயணம், பாரதம் போன்ற புராணங்கள், ஆகாரத்திற்கு மோதகம், பாயஸம், மது லாஜம், (தேன் பொரி) அபூபம் போன்றவைகளை உபயோகித்தாக சான்று பகர்கிறது. பதஞ்ஜலி மஹா பாஷ்யம் ஜாதிப்பத்திரி, சர்க்கரை கலந்த 'பலாலம்' என்ற இனிப்பைப் பற்றிக் கூறுகிறது. இந்நூல் கோதுமை, நெய்யினுல் ஆன ''பூபலிகா'' என்ற பண்டத்தைப் பற்றியும் குறிப்பிடுகிறது.

சுச்ருதம், அங்கவிக்ஞா என்ற நூல்கள் ஸம்யாவம், மொரண்டகம் என்ற இனிப்புகளின் பெயர்களைக் கூறி விளக்குகிறது. இதன் செய்முறை தற்கால பால் கோவா, குலோப் ஜாமூனை ஒத்து இருக்கிறது. சுக்ர நீதிசாரம் என்ற நூல் சமையற் கலைப் பற்றியும், க்ஷீர உதும்புரம், முரமுரம் என்ற இனிப்பு வகைபற்றியும் விவரிக்கிறது. இவ்விரு பண்டங்களும், தற்கால ஜீனி பொம்மை மிட்டாய்களின் செய்முறையை ஒத்து இருக்கிறது. இந்நூல் தற்கால ரசகுல்லாவைப் போல அமைப்புடைய க்ஷீரப்ரகாரம் என்பதையும் விவரிக்கிறது. பொதுவாக பௌத்த சமண எழுச்சிக்குப் பிறகுதான் பலவித புதிய பட்சணங்கள் அறிமுகமாயின. அப்போது மண்டகம் என்ற சர்க்கரை நெய் தடவிய ரொட்டியும், மஹா சீர்ஷம் என்ற இனிப்பு அடையும், பாலினுல் ஆன இனிப்புக்களான கயபுன்னம், ஸிஹகூதீரம் என்பவைகளும் வழக்கின் வந்தன. அதர்வண வேதம் ஐந்தாம் காண்டத்தில் ''லாக்ஷா'' என்ற உடலுக்கு நலம் தரும் லேகியம் பற்றி கூறுகிறது. எனவே இந்நன்னுளில் 'தமஸோ மா ஜ்யோதிர்கமய' என்று வேதத்தில் ''இருளில் இருந்து என்னை ஒளிக்கு இட்டுச் செல்'' என்று கூறியபடி ஏழுமலையான் திருவருளில் நாம் கங்கா ஸ்நாநம் செய்து இனிப்புக்களை உண்டு ஒளி மயமான எதிர் காலத்தை அடைவோமாக.



## பத்துக் கட்டளைகள்?

திருக்கோயிலூர் தபோவனத்தில் பல காலம் வாழ்ந்து எண்ணற்ற சீடர்களை ஜாதி மத பேதமின்றி உருவாக்கி அண்மையில் ஜீவன் முக்தரான ஸ்வாமி ஸ்ரீ ஞானனந்தகிரி அடிகளார் அவர்கள், காலத்திற்கேற்ப உபதேசம் செய்வதில் வல்லவர். அவர்களுடைய பத்துக் கட்டளைகள் பின்வருமாறு:

1. அன்பாயிரு—ஆனுல் அடிமையாகாதே
2. இரக்கம் காட்டு—ஏமாந்து போகாதே
3. கொடையாளியாயிரு—ஓட்டாண்டியாகாதே
4. சிக்கனமாயிரு—கருமியாயிராதே
5. சுறுசுறுப்பாயிரு—படபடப்பாயிராதே
6. பொறுமையாயிரு—சோம்பலாயிராதே
7. வீரனுயிரு—போக்கிரியாயிராதே
8. இல்லறத்தை நடத்து—காம வெறியனுகாதே
9. பற்றற்றிரு—காட்டுக்குப் போய்விடாதே
10. நல்லோரை நாடு—அல்லோரை வெறுக்காதே.

அனுப்பியவர்: திரு. பி. ரவீந்திரன் பி. ஏ.

# ஆஸ்திகர்களின் இன்றைய நிலை

கலியுகம் பிறந்து 5086 ஆண்டு நடைபெற்று வருவதை நாம் அறிவோம். கலி தோஷத்தால் தெய்வ நம்பிக்கை குறைவுபெற்று "நாத்திக வாதம்", அதிகம் ஏற்படுவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். தெய்வ நம்பிக்கையுள்ள "ஆஸ்திக பெருமக்களிடமும்" தேவையில்லாத வரட்டு வேதாந்தமும், வீண் அபவாதப் பேச்சுக்களும் மலிந்துக் கிடக்கின்றன.

புண்ணிய பூமி என்று சிறப்புப்பெறும் நம் பாரத தேசத்தில் திருமாலை பிரதான தெய்வமாக வழிபடும் வைணவர்களுக்கும், சிவனை பிரதான தெய்வமாக வழிபடும் சைவர்களுக்கும் இடையே கருத்துபேதமும் சமயச்சச்சரவும் ஏற்பட்டிருக்கிறது. அவரவர் வழிபடும் உபாசனை தெய்வம் மிகச் சிறந்தது என்று தமக்குள் எண்ணுவது எள்ளளவும் தவறில்லை. ஆனால் மற்றவர்களைக் குறைகூறி தாம் வழிபடும் முறைதான் சிறந்தது மற்றவை அனைத்தும் சிறுமையே என்று கூறுவது எவ்வளவு கேவலம்!

திருமால் மானிடராக ஸ்ரீராம பிரானக அவதரித்து இராமேஸ்வரம் வந்து லிங்கப் பிரதிஷ்டை செய்து சிவபூஜை செய்த வரலாற்றை நாம் அனைவரும் படித்திருக்கிறோம். அதே போல் சிவபெருமான் காசியில் காசி விஸ்வேஸ்வரராக இருந்துகொண்டு பிரியும் உயிர் அனைத்திற்கும் தாரக நாமமாக 'ராமநாமத்தை' செவிகளில் ஓதிக்கரையேற்றுவதாக உள்ள வரலாற்றையும் நாம் அறிந்திருக்கிறோம். இந்த ஒருமைப்பாட்டை நாம் நினைவுபடுத்திக்கொள்ளவே அரியும் சிவமும் ஒன்று என்ற கொள்கைக்கு அழுத்தம் கொடுப்பதற்காகவே உயிர் நீத்தவர்கள் வாய்க்கு 'அரிசி (அரி-ஹரி: சி-சிவன்) போடப் படுகிறது.

இந்த ஒற்றுமைக்கு வித்திடவே ஸ்ரீ ஆதிசங்கரரின் வழிவந்த ஆச்சாரியாள் அவர்களும் தமது கையொப்பமாக "நாராயண ஸ்மிருதி" என்று எழுதுவதை வழக்கமாக கொண்டுள்ளார்கள். சிவனும் ஒன்று ஹரியும் என்பதைக் காட்டவே இறைவன் 'அர்த்த நாரீஸ்வரராக' காட்சி அளிப்பதுடன் "ஸ்ரீ சங்கர நாராயணனுகவும்" அருள்பாலிக்கிறர்.

ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் எழுதியபோது ஏற்பட்ட சுவையான நிகழ்ச்சியை இங்கு நினைவுக்கு கொண்டு வருவோம்.

ஸ்ரீ விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம் செய்பவர்களுக்கும், ஸ்ரீலலிதா சகஸ்ரநாம பாராயணம் செய்பவர்களுக்கும் ஏற்படும் பலன் ஒன்றுதான். அவர்களின் பக்தி நெறி, உள்ள திண்மையைப் பொறுத்து பலன் மாறுபடுமே அல்லாது பாராயணத்தில் ஏதும் ஏற்றத்தாழ்வு கிடையாது. லலிதாவுக்கும் கண்ணனுக்கும் உள்ள ஒற்றுமையை விளக்க "கதாசில்-லலிதேசானீ பும்ரூபா கிருஷ்ண விக்ரஹா"—லலிதா பரமேஸ்வரியே புருஷ ரூபத்தில் ஸ்ரீகிருஷ்ண வடிவத்தில் தோன்றுகிறர். இந்த உண்மையை எடுத்துக் காட்டத்தான் ஸ்ரீஆதிசங்கர் ஸ்ரீ லலிதா சகஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் எழுத லலிதா சகஸ்ரநாம புத்தகத்தை எடுத்து வரும்படி சிஷ்யனிடம் சொன்னர். ஆனல் சிஷ்யன் ஸ்ரீ அம்பாளின் உத்தரவுப்படி ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாம புத்தகத்தை எடுத்துவர ஸ்ரீ பரமாச்சாரியாள் ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாமத்திற்கே முதன் முதலில் பாஷ்யம் எழுதினர்.

வேதவியாசர் — வேதத்தை எளிமைப்படுத்த ரிக், யஜுர், சாம, அதர்வணம்—என்ற நான்கு பிரிவாக வேதத்தை தொகுத்தார். வேதம் உபநிஷதம் போன்றவற்றை அறிய சம்ஸ்கிருதம் பாண்டித்யம் இல்லாதவர்கள் இதன் பலனை அப்படியே அடைய இனிய தமிழில் "திராவிட வேதம்" என்ற 'நாலாயிர திவ்ய பிரபந்தம்' என்ற அரிய பொக்கிஷம் ஆழ்வார்களால் தொகுக்கப்பட்டது.


திரு. சோ. ரங்கசுவாமி,
நாட்டரசன்கோட்டை.


சிவபெருமானின் அம்சமான ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்ரீ அம்பாளை அழகின் அழகு என்ற அமைப்பில் 'ஸ்ரீ சௌந்தர்ய லஹரி' என்ற 60 பாடல்களை உலகத்தவர் உயர்வடைய மற்றும் எல்லா நன்மையும் உண்டாக இயற்றினர். ஸ்ரீ பூமிபிராட்டியின் திரு அவதாரமான ஸ்ரீ ஆண்டாள் — ஸ்ரீ கண்ணனின் திவ்ய குணங்களை எடுத்துக் காட்டி பாவையர் நோன்பாக 30 பாடல்களைக் கொஞ்சும் தமிழில் இயற்றி இருக்கிறர். ஸ்ரீசௌந்தர்ய லஹரி சம்ஸ்கிருதத்தில் படிப்பதால் ஏற்படும் பலனும், தமிழில் திருப்பாவை படிப்பதால் ஏற்படும் பலனும் நிச்சயமாக ஒன்றுதான். அவரவர்களுக்கு பிரியமானதை— எளிதானதை 'மொழிப்பிரச்னை' ஏதும் இல்லாமல் பாராயணத்திற்கு எடுத்துக்கொள்ளலாம். தூய உள்ளமும்—பக்தியும்தான் முக்கியம்.

நடந்து கொண்டு இருக்கும் கலி தேவனின் சாட்டை அடியில் இருந்து தப்பிக்க ஆஸ்திகப் பெருமக்கள் தமக்குள் உட்பூசல் ஏதும் இல்லாமல் அவரவர்களுக்குள்ள சம்பிரதாய ஆகம முறைப்படி அவரவர்களின் இஷ்ட தெய்வத்தினை திடமான தூய உள்ளத்துடன் வழிபட்டு கலிதேவனின் இருக்கமான பிடியில் இருந்து தப்பித்து உய்வோமாக! ★

# உணர்வும் உயர்வும்

செல்வி. எம். கலா-வேலூர்.

நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த வாழ்க்கையை இவ்வளவு தான் என்று கணக்கிட்டு யாராலும் கூற இயலாது. ஆயினும் இவ் வாழ்க்கையில் உணர வேண்டிய கட்டங்கள் எத்தனையோ! அங்ஙனம் உணர்ந்ததால் உயர்ந்தவர்கள் எத்தனையோ! உணர்வால் உயர்ந்தவர் உபதேசமாக வளர்ந்த காப்பியங்கள் எத்தனையோ! உணர்ந்தவர் உய்த்துணர்ந்தால் உயர்வு அடையலாம் என்பதை நம் அன்றாட வாழ்நாளில் கண் கூடாகக் காண்கின்றோம். உணர்வு காலத்தால் மாறுபடாதது. பொதுவானது; ஏதுவானது.

நாம் எவ்வளவோ திட்டங்கள் போடுகிறோம். தோல்வி அடைகிறோம். அப்படியானால் நமக்கும் மேலாக ஒருவன் இருந்து 'அதை' நடத்துகிறான் என்றுதானே பொருள். எப்போது நம் திட்டங்கள் வெற்றி பெறுகின்றனவோ அப்போது இறைவன் நமக்கு அனுமதியளித்துவிட்டான் என்றுதானே பொருள்.

'' ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்
டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—
ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும்
நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்''

என்பதை உணர வேண்டும்.

ஒருபடி மேலேறக் கீழே இருப்பதை விட்டாக வேண்டும். மேலானதைப் பெற கீழானதை விட்டாக வேண்டும் சிறுமையை அகற்ற பெருமை சேரும். இதையே மாணிக்கவாசகர்,

தந்தது உன்தன்னைக் கொண்டது
என் தன்னைச்
சங்கரா! ஆர்கொலோ சதுரர்?
அந்த மொன்றில்லா ஆனந்தம்
பெற்றேன்
யாது நீ பெற்ற தொன்று
என்பால்''

என்கிறார்.

மின் சக்தி வெவ்வேறு இடத்தில் வெவ்வேறு வடிவெடுத்து வேலை செய்கிறது. ஓர் இடத்தில் வெப்பத்தை உண்டு பண்ணுகிறது. மற்றோர் இடத்தில் தணுப்பை உண்டு பண்ணுகிறது. ஓர் இடத்தில் யந்திரத்தை இயக்குகிறது. இன்னுமொரு பக்கம் காந்தமாக மாறி அசையாது பிடிக்கிறது தெய்வம் உயிர் அனைத்திற்கும் உயிராக இருப்பதால் வாழ்வு வெவ்வேறாக வடிவு எடுக்கிறது. இதை உணர வேண்டும். இதை திருமந்திரம்,

'' அவனை ஒழிய அமரரும் இல்லை
அவனன்றிச் செய்யும் அருந்தவம்
இல்லை
அவனன்றி மூவரால் ஆவதொன்
றில்லை
அவனன்றி ஊர்புகும் ஆறறி யேனே!

என்கிறது.

கஸ்தூரி மான் தன் உடலின்று கஸ்தூரியை உண்டு பண்ணுகிறது. அதன் வாசனையை நாடி அது பிற இடமெல்லாம் அலைகிறது. தான் தேடுவது தன்னிடத்தே இருப்பது அதற்குத் தெரியாது. மனிதன் வெளியுலகில் நாடுவதெல்லாம் தன்னிடத்தில் இருப்பதை அறிவதில்லை. மனத்தகத்தே குடி கொள்ள, குடி கொண்டிருக்கும், குடி கொள்ள போகும் தெய்வத்தை கண்டு அறிவதே இல்லை. இதை,

'' செம்மையறி வாலறிந்து தேகாதிக்
குள்ளிசைந்த
எம்மைப் புலப்படவே யாமறிவ
தெந்நாளோ''

என்கிறார் தாயுமானவர்.

பெரிய பட்டணம் ஒன்றுக்கு வழி போக்கனாக வரும் ஒருவன் முதலில் தங்குவதற்கு நல்ல இடம் தேடி, கிடைத்த பின்னர் ஊர் சுற்றிப் பார்க்கலாம். அவ்வாறு செய்யா விட்டால் இரா தங்க இடமில்லாது தவிக்க நேரிடும். இவ்வுலகு பெரிய பட்டணம். மரணம்தான் இரவு. இறைவனது திருவடிதான் தங்குமிடம். நாம் தங்க இறைவனது திருவடியை தேடிக் கொள்ள வேண்டும். இதை உணர்ந்த பெரியாழ்வார்

ஏய்ப்பு என்னை வந்து நலியும்போது
அங்கு
ஏதும் நான் உன்னை நினைக்க மாட்
டேன்
அப்போதைக்கு இப்போதே சொல்லி
வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளியானே'

என்கிறார்.

அண்டத்திலுள்ள யாவும் புறப்பட்ட இடத்தையே திரும்பிப் போய் சேர்வதைக் குறியாக கொண்டிருக்கின்றன. கடலின்று கிளம்பிய நீராவி திரும்பவும் கடலையே சென்றடைகிறது. நாம கடவுளிடத்திருந்து புறப்பட்டு வந்தவர்கள். திரும்ப அவரைச் சென்றடைவது நமது குறியாகும். இதனை உணர்ந்துதான் பத்திரகிரியார்,

குறியாகக் கொண்டு குலமளித்த
நாயகனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்ப
தெக்காலம்?

என்கிறார்.

கற் சிலையை வெய்யிலோ மழையோ, குளிரோ தாக்காது. சலன மற்றவனுக்கு இன்ப துன்பம் இல்லை. உற்றார் உறவினர் யாவரும் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள வினையை முடித்துச் செல்ல இவ்வை

யகத்தில் வந்தவர்களே! ஒருவர் போக்கிற்காக மற்றவர் காத்திருக்க முடியுமோ? தனித்தனியே வருவதும் போவதும் நிகழக் கூடியவை. அப்படியிருக்க இவர்கள் எப்படி நமக்கு நிலைத்த உறவு ஆவார்கள்? இதை உணர வேண்டும்: கடவுள் ஒருவரே நிலைத்த உறவு கொண்டவர். பட்டினத்தார் இதை உணர்ந்தவராக,

என்பெற்ற தாயரு மென்னைப்
பிணமென் றிகழந்து விட்டார்
பொன் பெற்ற மாதரும் போவென்று
சொல்லி புலம்பி விட்டார்
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம்
வந்து குடமுடைத்தார்
உன்பற் றொழிய வொரு பற்று
மில்லை உடையவனே!

என்கிறார்.

தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு நடக்கும் குழந்தை எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆனால் தந்தையினால் எடுத்து சுமந்து செல்லப்படும் குழந்தைக்குக் கவலையே இல்லை. கை கொட்டி அது மகிழ்ந்திருக்கலாம். தெய்வத்திடம் அன்பு பூண்ட மனிதர் பாங்கு அத்தகையது. அடைக்கலமாக திருவடிகளை கொண்டவர்க்கு கவலைதான் ஏது? இதை உணர்ந்த மாணிக்கவாசகர்,

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ
எண் தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே!

என்கிறார்.

வாழ்க்கையே சக்கரமாகிறது. சுகமும் துக்கமும் மாறி மாறி வருகின்றன. வந்ததை, கிடைத்ததை வைத்துக் கொண்டு நிம்மதி அடைபவன் அறிவாளி. இல்லாததை நினைந்து தன் வாழ்வையும் பிறர் வாழ்வையும் கெடுத்துக் கொள்பவன் மூடன். வருந்துவதே தொழிலாகக் கொண்டவர் மாந்தர். இதை,

வருந்தி அழைத்தாலும் வாராத
வாரா
பொருந்துவன போமின் என்றால்
போகா இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாகி நெடுந்தூரம்
தாம் நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்''

என்று உணர்ந்தே சாற்றுகிறது வெண்பா.

இங்ஙனம் உரை வேண்டியவைகளை நூல்கள் பல கூறியிருப்பதை உணர்ந்து வாழ்வதால், உயர்வை அடையலாம். 'உணர்ந்து உயர்வதே' மனிதனின் நோக்கமாக இருக்க வேண்டும்.



## ஹரோ ஹரா

ஹர என்ற சொல்லுக்கு பாவங்களைப் போக்குவது என்று பொருள். ஹர ஓ ஹர என்ற சொல் தமிழில் அரோகரா என்று வந்தது. சிவ நாமங்களில் அர என்ற சொல் உயர்ந்தது. அர ஹரா என்று இடையறாது உச்சரித்தால் நம் பாவங்கள் யாவும் தீயிலிட்ட பஞ்சுபோல் எரிந்து ஒழியும்.

## வணங்க வரம் தா!

மஹாலட்சுமி தாயே! உன்னை வணங்கினாலே போதும். அந்த வணக்கங்கள் சம்பத்து, இந்திரிய சந்தோஷங்கள், சாம்ராஜ்யம் எல்லாம் தந்து விடும். ஆனால் இதெல்லாம் எனக்கு வேண்டாம். எனக்கு உன்னிடமிருந்து ஒரே ஒரு செல்வம்தான் வேண்டும். என் பாபங்கள் எல்லாவற்றையும் கவ்வி எறிவதற்கும் உன்னை வழிபடுவதே சாதனமாகிறது. செல்வ தேவதையான நீ எனக்குத் தருகிற செல்வம் இந்த வழிபாடுதான். இது என்னை விட்டு நீங்காமல் இருக்கட்டும்.

— ஸ்ரீ ஆதி சங்கரர்.

## நெல்லியின் பெருமை

நெல்லி இலையால் அர்ச்சனை செய்தாலும், நெல்லிக்கனியை படைத்தாலும், மகாவிஷ்ணு மகிழ்வார். நெல்லி மரம் உள்ள வீட்டில் பூதப்ரேத ஏவல் சூனியம் நெருங்காது. ஏகாதசியில் நெல்லி ஜலத்தில் நீராடி துவாதசியில் நெல்லிக்காய் உண்பவன் கங்கை நீராடிய பலனும், காசிவாச பலனும் பெறுகிறான். நெல்லி உள்ள இடத்தில் திருமால் திருமகளுடன் தங்குகிறார். சூரியன் தவிர எல்லா தேவர்களையும் நெல்லியைக் கொண்டு பூஜிக்கலாம்.

ஞாயிற்றுக்கிழமை ஸப்தமி, சங்கிராந்தி, ஷஷ்டி, வெள்ளிக்கிழமை, அமாவாசை நவமிகளில் நெல்லியைப் பயன்படுத்தக்கூடாது. திருக்கோவில் விமான உச்சியில் கலசத்துக்குக் கீழே நெல்லிக்கனி வடிவில் ஒரு கல்லை வைப்பார்கள். அதற்கு ஆமலகம் என்று பெயர்.

தொகுத்தனுப்பியவர் : — கமலா மாரியப்பன்,

# நண்டும் நாரையும் ★


மைதிலி வேணுகோபாலன்
சென்னை.


இறைபாதி—இயற்கை பாதி என்கிறபடி அந்தந்த தலங்களிலே எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் பற்றிய பாசுரங்களில், அந்தத் தலத்தின் இயற்கையழகு வர்ணிக்கப்படுவது வழக்கம்.

அந்த ஊரின் இயற்கைவளங்களும் இயற்கையழகும் நமக்குத் தெரிய வருகிறது. இலக்கிய நலத்தையும் ரசிக்க முடிகிறது. அதைத் தவிர, மிக முக்கியமானது, இந்த இயற்கைப் பொருள்களைக் குறிப்பிடுகிற வியாஜத்தில், உள்ளுறை பொருள்களையும், தத்துவங்களையும் அவற்றின் மீதேற்றிப் பாடுகின்றனர். அதனால் நமக்கு உள்ள தத்துவங்களும் மறைபொருட்களும் சுலபமாக விளங்கி விடுகிறது. நினைவு வைத்துக்கொள்ளவும் சுலபமாக இருக்கிறது.

ஆழ்வார்களின் பாசுரங்களிலே, எந்த ஒரு வார்த்தையும், வீணாகவோ எதுகை மோனைக்காகவோ, அல்லது அவர்களின் புலமையைக் காட்டுவதற்காகவோ பாடப்பட்டவை அல்ல. ஒரு மிகச்சிறிய வார்த்தைக்குக்கூட முக்கியத்துவமும் பெருமையும் உண்டு.

திருமழிசைப்பிரான், திருவரங்கக் காட்சியொன்றை, நமக்குக் காட்டியருளுகிறார்.

“ கொண்டை கொண்ட கோதை மீது,
தேனிலாவு கூனிகூன்
உண்டை கொண்டு அரங்க ஓட்டி உன்
மகிழ்ந்த நாதனூர்
நண்டை உண்டு நாரைபேர வாளை
பாய நீலமே
அண்டை கொண்டு கெண்டை மேயும்
அம்தண்நீர் அரங்கமே”

தலைமுடியிலே அணியப்பட்ட மலர்களிலே, வண்டுகள் உலாவப் பெற்ற கூனியின் கூன் முதுகிலே, உண்டை வில்லை வைத்தெறிந்து விளையாடி மகிழ்ந்த எமபெருமானின் திவ்ய தேசம் எதுவென்றால், நாரையொன்று, பருத்த நண்டைத் தின்றுவிட்டு, நகரவும் முடியாமல் மெள்ள மெள்ள நடந்துவர, தன்னைத் தான் கொத்தியுண்ண அந்த நாரை, வஞ்சகமாய் மெதுவாக வருவதாக எண்ணிக்கொண்ட வாளை மீன், அஞ்சித் துள்ளிக் குதிக்கிறது. கரு நெய்தல் மலர்களை அரணாகக் கொண்டு கெண்டை மீன், அம்மலரிடையே பதுங்கிக் கொள்கிறது.

உபமான உபமேயங்களைப்பாருங்கள்.

நண்டு = ஸம்ஸாரிகள்
நாரை = அஹங்காரர்
வாளை = தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள முயலுபவர்கள்.
கெண்டை— நீயே புகல் - வேறொன்றறியேன் என்று எம்பெருமானை சரணமடைந்தவர்கள்
நீலமலர் = நீலமேனியனான எம்பெருமான்.

செழித்துப் பருத்திருக்கும் நண்டைப் போன்றவர்கள் ஸம்ஸாரிகள், உலக சுகங்களிலும், உலக இன்பங்களிலும் மூழ்கிப் பருத்திருக்கிறார். அதனால்தான் கண் தெரியாமல், நாரைக்கு இரையாகும் நண்டுக்கு உவமையாகியிருக்கின்றனர். இன்னும் எதை எதை உண்ணலாம் என்று நண்டு ஸதா அலைந்து கொண்டேயிருப்பதைப் போல, ஸம்ஸாரிகளும் இன்னும் எந்த எந்த விஷயங்களை அனுபவிக்காது தவறிப்போய் விட்டு விட்டோம், உடனடியாக அவற்றையும் ஆண்டு அனுபவிக்க வேண்டுமே என்கிற பேராசையில் அலைகின்றனர். முடிவில் பெரு நஷ்டப்படுகின்றனர்.

இந்த நண்டை நாரை விழுங்குவதைப் போல, ஸம்ஸாரிகளான நம்மை, அஹங்காரம் விழுங்கி விடுகிறது. வசதிகள் பெருகப் பெருக நமக்கு அஹங்காரம் தலைக்கேறி விடுகிறது. அதனால் என்னென்ன ஆர்ப்பாட்டங்கள் செய்து விடுகிறோம்! அடேயப்பா!

பின்பு,நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள, தான தருமங்கள் செய்கிறோம். உபாஸனைகள் செய்கிறோம், வாளை மீனைப் போல. அவர் சொன்னார் என்று அந்தக் காரியம் செய்கிறோம். இவர் சொன்னார் என்று, இந்தக் கைங்கரியம் செய்கிறோம். கஜேந்திரனையும், திரௌபதியையும் அறவே மறந்து. தன்னைக் காப்பாற்றிக்கொள்ள, கஜேந்திரன் முடிந்தவரை போராடியவரை எம்பெருமான் வரவேயில்லை. இரண்டு கைகளையும் குறுக்காக வைத்துக் கொண்டு திரௌபதி கதறியவரை, அதாவது, தன்மானத்தைத் தானே காப்பாற்றிக் கொள்ள அவள் முயன்றவரைக்கும், கண்ணன் அருள் புரிந்தானில்லை. வெட்கத்தை விட்டுக் கையை விட்டாள். உடனே பலன் கிடைத்தது.

எம்பெருமானிடம் சரணடைந்திருக்கின்றனர் சிலர். புகழ்வரினும் இகழ்வரினும் பெருமை, சிறுமை வரினும் செல்வமோ, தரித்திரமோ, எதுவரினும் நிச்சிந்தையாக சரணமடைந்திருக்கின்றனர், சிலர், கெண்டை மீனைப் போல, சுற்றுப்புற நிகழ்ச்சிகளின் உணர்வேயின்றி.

கெண்டை மீன் அண்டியிருப்பது, கருநெய்தல்மலரை.அது,கரியமேனிப் பிரானான எம்பெருமானையே தஞ்சமடைந்திருப்பதைக் குறிக்கிறது.

ஆழ்வார் ஏதோ சம்பந்தா சம்பந்தமேயில்லாமல் நாரை, நண்டு என்று ஏதேதோ சொல்கிறார் என்று ஆழ்ந்து படிக்காமல் இப்பாசுரத்தை விட்டு விட்டு மேலே போயிருந்தால் இந்த அழகான முத்தை நாம் எடுத்திருக்க முடியுமா?

திருமழிசையாழ்வார், ஏதோ தன் புலமையைக் காட்ட இப்பாசுரத்தை எழுதவில்லை. குறைமதிகளான நாம் சுலபமாக தத்துவங்களைப் புரிந்து கொள்ள வேண்டுமென்கிற நல்லெண்ணத்தில், நாம் இயற்கையில் காணுகின்றவற்றை வைத்துப் பாசுரம் அருளியிருக்கும் கருணையே கருணை!!

திருமழிசையாழ்வார் திருவடிகளே சரணம் !! ★

# ஆழ்வார்களும் குண்டலினி யோகமும்

வைணவ மதத்தை நிலை பெறச் செய்தவர்கள் ஆழ்வார்கள் ஆவார்கள். அவர்கள் பன்னிரண்டு பேர்களின் பாசுரங்களின் தொகுப்பே பிரபந்தமாகும். நம்மாழ்வார் மட்டுமே முதலாச்சாரியாராகக் கருதப் படுகிறார். அவர் பாடிய திருவாய்மொழியில் வேதாந்தக் கருத்துக்களின் உண்மையை விளக்குகிறார். அவர் பிறந்தது முதல் மௌனியாகவே இருந்தார். பெற்றோர்கள் அவரை, தெய்வ வாக்கின்படி ஒரு புளிய மரத்தடியில் அமர்த்தினர். பதினாறு ஆண்டுகளுக்குப் பின், மதுர கவி ஆழ்வார் அவரிடம் வந்தார். நம்மாழ்வார் பேராற்றலுடன் கலந்திருந்தமையே அந்த மௌன நிலையாகும். நிலத்தினின்று தோன்றிய ஒளி இரவில் பேரண்டம் வரை தெரிந்தது. ஒளியை வழியாகக் கொண்டு மதுர கவியாழ்வார் இரவிலே நடந்து பகலில் கிடந்து இறுதியில் மாறன் திருநகர் வந்தடைந்தார். மௌன நிலை மாறனைக் கண்ட மதுரகவி 'செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் அது எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' என்று கேட்டார். மாறன் 'அது அத்தைத்தின்று அங்கே கிடக்கும்' என்ற உண்மையை உணர்த்தினார். மதுரகவி மகிழ்ந்து மாறனது சீடரானார்.

நம்மாழ்வாரின் திருவாய் மொழி நான்கு வேதங்களின் தத்துவ உண்மையை விளக்குகிறது. அவரே முதலாச்சாரியாராக விளங்கி உலகிற்கு உண்மைப் பொருளை உணர்த்தி வந்தார். சடகோபன் என்ற பெயரும் உண்டு. தன் முனைப்பு நீங்க வேண்டி, தங்களை மறந்து 'நான்' என்று கூறுது 'அடியேன்' 'தாசன்' என்று கூறும் நிலையை ஏற்படுத்தினார். திருக் கோவில்களில் 'சடாரி'வைப்பதன தத்துவம் துரிய நிலையைத் தூண்டுவிப்பதாக அமைந்துள்ளது. சடாரியின் மேல் சடகோபனின் பாதங்கள் அமைந்துள்ளதால் அடியேன் என்ற நிலைக்கு வருகின்றோம். பன்னிரண்டு நாமங்கள் போடுவதன் தத்துவம் உடலில் மூலாதாரம் முதல் துரியம் வரை உள்ள முக்கிய இடங்களில் மனம் நிலைத்து நிற்கவும், மேல் நோக்கி செல்ல வேண்டியே அவ்விடங்களில் திருமண் காப்பிட்டு வந்தனர்.

'பஞ்ச சமஸ்காரம்' என்பது ஐந்து வகைப்படிகள் 1. சங்கு சக்கர இலச்சினை தோள்களில் இடுவது, 2. நெற்றியில் திருமண் 3. தாசன் அல்லது 'அடியேன்' என்ற நிலை அடைதல், 4. திருமந்திரம் ஓதுதல், 5. திருமகள் நாதனை ஆராதித்தல். இவை வைணவர்களின் அடிப்படை நிலை. ஆழ்வார்கள் வகுத்த வழி மூலம் குண்டலினி சக்தி மூலாதாரத்திலிருந்து மேல் நோக்கிச் செல்கிறது. பின் சரணாகதி நிலை வரும்பொழுது தியாக நிலை பெற்று, தன் செயல்கள் யாவும் இறைவனின் செயலே என்ற உண்மையை உணர்ந்து பரிபூர்ண நிலை அடைகின்றனர். அப்போது பற்றற்ற நிலை ஏற்படுகிறது. 'அற்றது பற்றெனில் உற்றது வீடு'. ஆழ்வார்கள் வகுத்த வழி மூலம் குண்டலினி யோகத்தைப் பல படிகளில் அமைத்துத் தந்துள்ளனர்.

கடவுள், உயிர், உடம்பு என்பதை ஈஸ்வரன், சித்து, அசித்து என்று கண்டனர். இதைக் குறிக்கவே மூன்று தத்துவத்திற்கும் மூன்று கோல்களை ஆச்சாரியார்கள் கையில் வைத்துள்ளனர். 'வி சிஸ்டாத்வைதம்' குரு மூலம் வீடு பெற வைத்துள்ளனர். கீதையில் 'எல்லாவற்றிலும் நான் உள்ளேன், நானே எல்லாமாக உள்ளேன்' என்ற உண்மையை அறிகிறோம்.

ஆகவே ஆழ்வார்கள் குண்டலினி யோக முறையை வேறு பெயரில் பல்லாண்டுகளுக்கு முன்பே செயல் படுத்தி வந்துள்ளனர். அதன் பொருளை அறியாது காலம் கடத்தினோம். இன்று பல யோகிகள் கூறுவதை ஒப்பிட்டால் ஆழ்வார்கள் கருத்தும் ஒன்றென விளங்கும். ஆனந்த வாழ்வு வாழ வகை செய்து தந்த ஆழ்வார்கள் பரம பதத்தில் பேரின்ப வாழ்வு வாழ வாழ்த்துவோம். ★

செவந்தாம்பட்டி திரு. சுந்தரராஜன்

## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப் படும். ஒரு வருடத்திற்கும் குறைவான கால அளவுக்காக அனுப்பப் படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

# பெருந் தமிழன்

முதலாழ்வார்கள் எனப் போற்றப் படுபவர்கள் மூவர். அவர்கள் பொய்கையாழ்வார், பூதத்தாழ் வார், பேயாழ்வார் ஆவர். ஓரிரவு தங்கியவிடத்திலே மறு இரவு தங்காது ஊர் ஊராகச் சென்று வாழ்கின்றனர். ஆகவே இம்மூவரும் ஒன்று கூடும் வாய்ப்பே இல்லாது போகின்றது. இவர்கள் மூலம் உலகோருய்ய இனிய தமிழ் பிரபந்தங்கள் செய்ய வேணுமே! ஆகவே திருமால் இவர்களைத் திருக் கோவலூரில் ஒன்று சேர்க்க திரு வுள்ளம் கொள்ளுகிறான். அவ் வாறே இம்மூவரும் திருக்கோவலூ ரில் ஓரிரவு ஒன்று சேர்கிறார்கள். அவர்கள் தங்கிய இடமோ, ‘ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம் மூவர் நிற்கலாம்’ என்னும்படியிருக் கிறது. இவர்களின் நெருக்கத்தைத் திருமால் விரும்புகிறான் போலும்! தாங்கள் நெருக்கப்படுவதை அவர் கள் உணர்கிறார்கள்.

தாங்கள் யாரால் நெருக்கப்படு கிறோம் என்பதைக் காண விழைகின் றனர். இருட்டிலே எப்படிக் காண் பது? ஆகவே முதலாமவர் வெய்ய கதிரோனை விளக்காக ஏற்றுகிறார்! இரண்டாமவர் ஞானச் சுடர் விளக் கேற்றுகிறார்! மூன்றாமவரோ திரு வோடு கூடிய திருமாலைக் காண்கிறார்! இவ்வாறு மயர்வற மதிநலமருளப் பட்ட இவ்வாழ்வார்கள் முறையே நூறு பதிகங்கள் கொண்ட முதல் திருவந்தாதி இரண்டாம் திருவந் தாதி, மூன்றாம் திருவந்தாதி என் னும் பிரபந்தங்களை அருளிச் செய் கின்றனர். அன்றலர்ந்த மலர்களா லாகிய மாலையும் சற்றைக் கெல்லாம் வாடி வதங்கித் தன் சோபையிழந்து விடுகிறது. என்றும் வாடாது புதுப் பொலிவுடன் விளங்கும் பொன்னா லான மாலைக்கோ மணம் இல்லை. இக் குறையில்லாது என்றும் மணத்தோடு பிரகாசிக்கும் இன்தமிழ் மாலைகளைச் சூட்டுகின்றனர் போலும்!

திருமலையிலே எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைச் சேவித்து அவன் திருவடியில் இருந்தமிழ் நன்மாலை சாத்துகிறார். இக்கைங்கர்யம் புரி யும் உகப்பின் மிகுதியாலே தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளும்படியாக ஒரு கவிதை மலர்கிறது அவர் நாவி னின்றும்.

“இருந்தமிழ் நன்மாலை யானே
இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது”
(2ம் திருவந்தாதி-74)

என தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளுகிறார். இவ்வாழ்வார் மயர் வற மதிநலமருளப் பெற்றவர் ஆகை யால் எம்பெருமானோடு உரையாடு வது சாத்யம் போலும்! இவ்வுரை யாடலை ஆசாரிய ச்ரேஷ்டர்கள் தங் கள் மனத்திரையில் கண்டுகளித்து, நாமும் கேட்டு ரசிக்குமாறு அழகிய வ்யாக்யானமிட்டு அருளியிருக்கின் றனர்.

ஆழ்வீர்! யாமே தமிழன்! அவ் வாறிருக்க, உம்மை நீரே பெருந் தமிழன் எனப் புகழ்ந்து கொள்ள லாமோ? என வினவுகிறார். நீரே பெருந்தமிழனானால் அதற்குரியவாறு ஒரு தமிழ்க் கவிதை பாடிக் காண்பி யும் என்றருளிச் செய்கிறார்.

திருமால் தானே தமிழன் என் கிறாரே எவ்வாறெனில், திருவரங்கத் திலே பள்ளி கொண்டிருக்கும் ‘அரங் கன்’தானே வானவர்கள் சந்தி செய்யும்படியாய் திருமலையில் நின்று சேவை சாதித்தருள்வது எனத் திருப் பாணாழ்வார், அமலனாதிபிரான் என் னும் பிரபந்தத்தில்,

“மந்திபாய் வடவேங்கட மாமலை வான
வர்கள்
சந்திசெய்ய நின்றான் அரங்கத்தர
வினணையான்”

என அருளிச் செய்திருக்கிறார். ‘அரங் கன்’ என்னும் திருநாமத்தில் “அ”, “ன்” என்னும் இரண்டு எழுத்துக் களும் தமிழ் அரிச்சுவடியிலே ‘அ’ முதல் எழுத்தாகவும், “ன்” கடை யெழுத்தாகவும் ஆகிறது. ஆகவே அவன் தமிழனாகத் திகழுகிறான். மேலும் தன் திவ்வியாயுதங்களான பாஞ்சசன்யம் என்னும் சங்கின் அம்சமாக பொய்கையாழ்வாரும், கதையின் அம்சமாக பூதத்தாழ் வாரும், நாந்தகமென்னும் வாளின் அம்சமாக பேயாழ்வாரும் தோன்றும் படி நியமனம் செய்தருளினன். இவ் வாறவதரித்த இவர்களின் நாவினின் றும் மலரும் ஞானக் கலைகளை செவி சாத்தியருள, திருமலையில் நிற்கிறான். அரங்கப் பெருநகரில் பள்ளிகொண்டு கிடக்கிறான்.

---

திரு. வெ. இராகவன்,
பள்ளத்தூர்.

---

குன்றுகளால் சூழப்பெற்ற பிர தேசமான அச்சூழ்நிலையையுட் கொண்டு அழகிய வெண்பா ஒன்று உடன் மலர்கின்றது ஆழ்வார் நாவி லினின்றும்.

“பெருகுமத வேழம் மாப்பிடிக்கு முன்
நின்று
இருகணிள மூங்கில் வாங்கி—அரு
கிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம்
கண்டீர்
வான் கலந்த வண்ணன் வரை”
(2ம் திருவந்தாதி-75).

திருமலையில் அருவி பெருக் கெடுத் துக் கொட்டுவதுபோல் ஆண் யானைக்கு மத நீர் பெருக் கெடுத்

தோடுகிறது. இந்நிலையிலும் தனக்கு இனியதான பிடிக்கு (பெண் யானைக்கு) வசப்பட்டுக் கிடக்கிறது. பதமான இரு கணுக்களையுள்ள இள மூங்கிலைப் பக்குவமாகப் பேர்த்தெடுக்கிறது. பக்கத்திலேயுள்ள தேன் கூட்டிலே அதனை நன்கு தோய்த்தெடுக்கிறது. பின் தன் பிடிக்குமுன் சென்று நின்று இதனை நீட்டுகிறது. இவ்வாறு நிற்பது இன்னும் என்ன வடிமை செய்ய வேண்டும் என்பது போலே! மேக நிறத்தவனை எம்பெருமானுடைய இருப்பிடமன்றோ இப்படியான திருமலை என்பது பொருள்.

அனைத்துலகையும் படைத்துக் காத்து அழிக்கும் போதும்; உலகோர்க்கு சுவர்க்கம் நரகம் மோக்ஷம் என்னுமவற்றைக் கொடுக்கும் போதும் பெருமாள் பெரிய பிராட்டியாரின் திருமுகத்தை நோக்கி நிற்பாராம். அவள் முகக் குறிப்புக்கு வசப்பட்டவராக எல்லாக் காரியங்களையும் செய்வாராம்.

'' சர்கோப சர்க ஸ்திதி!
ஸ்வர்க துர்காதிமாபவர்கிகபதம்
சர்வன் குர்வன் ஹரி: |
(ஸ்ரீ ஸ்தவம்-1)

என்றவாறு புருஷகார பூதையான பெரிய பிராட்டியாரின் வசப்பட்டிருக்கும் பெருமாள் வர்த்திக்கும் மலை திருமலை!

ஆசார்ய சார்வ பௌமராகிய இராமாநுஜர் திருமலைக்கு எழுந்தருளுகிறார். முதலிகளின் விண்ணப்பத்திற்கிணங்கி ஓர் நல்லுரை வழங்குகிறார். 'துவயம்' என்னும் மந்திர ரத்தினத்தைப் பொருளாகக் கொண்டு "அகல கில்லேனிறையும்'' என்னும் திருவாய் மொழிப் பாசுரத்துடன் ஒப்புமை கூறி, 'திருமந்திரம்' 'சரமச் சுலோகம்' இவற்றின் பொருளோடு மணம் பெறுகிறது அன்றைய உபன்யாஸம்.

அனந்தாழ்வான் என்னும் ஆசார்ய ச்ரேஷ்டர் எழுந்து நின்று இன்றே "பெருகு மத வேழம் மாப்பிடிக்கு முன் நின்று'' என்ற பாசுரத்தின் பொருளை நன்கு அநுபவிக்க முடிந்தது என்று எம்பெருமானாரை ஒப்புமை கூறித் தொடர்கிறார் :

'' பண்டரு மாறன் பசுந்தமிழ் ஆனந்தம்
பாய் மதமாய்
விண்டிட வெங்க ளிராமாநுசமுனி
வேழம்''
(இராமாநுச நூற்றந்தாதி—64)

''எம்பெருமானாரே! அமுதனாருளியவாறு நீரே "இராமாச முனி வேழம்'' என யானையாகிறீர். மாறனருளிய இன் தமிழ் பாசுரமாம் திருவாய் மொழியாலே விளைந்த ஆனந்தப் பெருக்கே "பெருகு மதநீர்'' என ஆகிறது. பிடி என்னும் பெண் யானை ஆண் யானைக்கு இனிய பொருளன்றோ! இங்கு குழுமியிருக்கும் முதலிகளன்றோ உமக்கு இனியவர்களாகிறார்கள். இவர்கள் முன் நின்றன்றோ உரை நிகழ்த்துகிறீர். ஆக "மாப்பிடிக்கு முன் நின்று'' என்பதும் உமக்கே பொருந்தும்.''

"மேலும் 'துவயம்' மந்திர ரத்தினம் எனப்படும். இரண்டு வாக்கியங்கள் கொண்டதாயுமிருக்கிறது. மூங்கிலானது ரத்தினங்களுக்குப் பிறப்பிடமாகும் என சாஸ்த்திரங்கள் கூறுகின்றனவாம். இதனின்றும் "இரு கணிள மூங்கில் வாங்கி'' என்பதோ மந்திர ரத்தினமான துவயத்தைக் குறிப்பதாகிறது''.

திருமந்திரமோ "எனக்கு என்றும் தேனும் பாலும் அமுதுமாய் திருமால் திருநாமம் நானும் சொன்னேன் நமரும் உரைமின் நமோ நாராயணமே'' என (பெரிய திருமொழி 6-10-6) தேனுகிறது. கீதோபதேசம் செய்தது கண்ணனே. அதினின்றும் எழுந்ததே சரமச் சுலோகம். அக்கண்ணனின் முகாரவிந்தமோ தேனுகச் சொல்லப்படுகிறது. இத்தால் "அருகிருந்து தேன் கலந்து நீட்டும்'' என்பது துவயம் என்னும் மந்திரத்தை திருமந்திரம், சரமச் சுலோகம் என்னும் தேனில் தோய்த்து வழங்குகிறீர்'' என புகழாஞ்சலி செலுத்துகிறார்.

இப்பாசுரம் தலைவன் தலைவி இல்லற நெறியைக் காட்டுவதாயினும் வைணவ தத்வார்த்தத்தையும் உள்ளடக்கிய வண்ணம் அமைந்திருப்பது நம்மை மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்கிறது.



## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக்காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D.) மூலம் அனுப்பினால் மேலாண்மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

: 8 :

பின்பு பகவத்ராமானுஜமுனிவரும் அரையர் கூறிய இவையனைத்தும் கேட்டு மிக மகிழ்ச்சியடைந்து திருவுள்ளத்தில் ஆராய்ந்து, முதலாழ்வார் மூவரும் தம் பிரபந்தங்களில்,

முதல் திருவந்தாதி—இருபத்தாறாம் பாசுரத்தில்—(செல்வம் வேணுமென்னும் ஆசையினால்) உயர்வாரும், (கைவல்யமோக்ஷமே போதும் எம்பெருமான் வேண்டாமென்றெண்ணி) அகன்று செல்வாரும், இனிய திருத்துழாய்மாலையணிந்த பெருமானை அகலாத(தம்) நிலையை நினைந்து எப்போதும் தொழு(ம் முக்தியை விரும்பு)மவரும் ஆகிய இவர்களுடைய பாவமாகிய நெருப்பை அணைக்கும் திருவேங்கடமலைதான் நித்யசூரிகளின் மனமாகிய விளக்கை (பெருமானது நீர்மையைக் காண இங்கு வாருங்கள் என்று) தூண்டுகின்ற மலையாகும்-என்றும், முப்பத்தேழாம் பாசுரத்தில்—ஒவ்வொரு திசையிலும் உள்ள வைதிகர்கள் வந்து ஸேவிக்குமிடமான திருவேங்கடமலையே (பாரதப்போரில்) வெண்சங்கமூதும் வாயனாய்த் தன்னையடைந்தவரிடம் மையல்கொண்ட பெருமான் உகந்தருளிய ஊராகும்—என்றும், எழுபத்தாறாம் பாசுரத்தில்—பூமியை யளந்த நீர்மையை உடைய பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமலை, ஒரு குறையும் நேராதவாறு பரமபதத்தை அளிக்கும்—என்றும், தொண்ணூற்றொன்பதாம் பாசுரத்தில் – திருப்பாற்கடல்வெள்ளத்தில் வசிப்பவனும் திருவேங்கடமலையில் பொருந்தியுள்ளவனுமான திருமால் உள்ளத்தில் உள்ளானென்று நெஞ்சே நினைக்கக்கடவாய் – என்றும்,

இரண்டாந் திருவந்தாதி—இருபத்தைந்தாம் பாசுரத்தில்—பரமபதவாஸிகளான நித்யசூரிகளின் துதியினால் உயர்ந்த இயற்கையான நற்குணங்களையுடைய திருமால் வந்து நின்ற இடம், மூங்கில்கள் ஓங்கி வளரப்பெற்ற குளிர்ந்த சாரலைக் கொண்ட வேங்கடமலையாகும்-என்றும், முப்பத்துமூன்றாம் பாசுரத்தில்-என் சிந்தை திருத்துழாய்மாலையணிந்த பெருமானுடைய திருநாமங்களைப் பலகால் நினைப்பதில் துணிவு கொண்டது. எனது உடல் அவனைப் பலகால் பணிவதில் துணிவு கொண்டது. எனது வாயும் மூங்கில்கள் உயரப்பெற்று குளிர்ந்த சாரலைக்கொண்ட மிடுக்குடைய வேங்கடத்திலேயுள்ளவனுடைய குணகணங்களைச் சொல்லும் வழியிலே செல்லுவதில் துணிவுகொண்டது—என்றும், ஐம்பத்து மூன்றாம் பாசுரத்தில்—வேங்கடமே நாங்கள் ஆதரிக்கும் மலையாகும்—என்றும், எழுபத்தைந்தாம் பாசுரத்தில் — மேகத்தையொத்த மேனிநிறத்தைக்கொண்ட பெருமானுடைய மலை திருவேங்கடமன்றோ—என்றும்,

மூன்றாந் திருவந்தாதி—முப்பத்தொன்பதாம் பாசுரத்தில் — சந்திர மண்டலத்திலே கிட்டின வெள்ளத்தையுடைய அருவிகளின் மிக்க ஒலியையுடைய நீரைக் கொண்டதான திருவேங்கடமலையில் வாழும் எம்பெருமான் (எனது) உள்ளத்திலே உள்ளான்—என்றும், அறுபத்தொன்பதாம் பாசுரத்தில்—(என் மகள்) மலையைக் கூறும் சந்தருப்பங்களில் (மற்றமலைகளைப் பாடாமல்) வேங்கடமலையைப் பாடுகின்றாள்—என்றும் அருளிச்செய்வதனாலும், இவ்வாறே பல பாசுரங்களிலும் திருவேங்கடமலையையும் அஃதுடையானையும் விசேஷமாக அருளிச்செய்யக் காண்கையினாலும் (முதலாழ்வார்கள்)திருவேங்கடத்தையும் அங்கு அனைவர்க்கும் எளியவனாக நித்யஸந்நிதிபண்ணிக்கொண்டிருக்கும் பெருமானையும் தமது நித்யானுபவத்திற்கு இலக்காயுள்ளவனாகத் தாமே அருளிச் செய்கின்றனர்.

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

இங்ஙனமே, அவர்கள் வேங்கடயாத்திரை செய்து அதன் தாழ்வரைகளில் வெகுநாட்கள் மங்களாசாஸனத்தில் ஊன்றியவராய்ப் பகவானை அனுபவித்துக்கொண்டிருந்தனரென்று பார்க்கவ புராணமும் கூறுகிறது.

அதற்குப் பிறகு, திருமங்கையாழ்வாரும் அம்முதலாழ்வார்களின் திருவுள்ளக் கருத்தைப் பின்சென்று பெரிய திருமொழி இரண்டாம்பத்து எட்டாந் திருமொழி இரண்டாம் பாட்டிலுள்ள—(பிறமொழிக் கலப்பற்றதனால்)விரும்பத்தக்க தமிழ்ப் பாசுரங்களைப் பாடுமவர்கள் வணங்குந் தேவனாகத் திருவேங்கடவனைத்

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

தெரிவிக்கிற 'செந்தமிழ்பாடுவார் தாம் வணங்கும் தேவர் இவர் கொல்' என்ற தம் ஸ்ரீசூக்தியினுல், விரும்பத்தக்க தமிழ்ப்பாட்டுக்களைப் பாடுமவர்களாக இசையப்பெற்ற முதலாழ்வார் மூவர்க்கும் திருவேங்கடமுடையானே அனுபவத்திற்கு இலக்கான பொருள் என்று வெளிப்படுத்தியுள்ளார் என்னும் இவ்வம்சமும் பெரிய பெருமாள் சிஷ்யபரம்பரையின் உபதேசத்திஞல் அறியப்படுகிறது.

ஆகையினுல் முதலாழ்வார்களுடைய பிரபந்தங்கள் (மூன்று திருவந்தாதிகளும்) அவர்களின் திருவுள்ளக்கருத்தின் திண்மைக்குச் சேர, திருவேங்கடமுடையான் ஒருவனையே முக்கிய விஷயமாகக் கொண்டவை என்று அறியக்கிடக்கின்றது.

ஆதலால்தான் திருவேங்கடமுடையானும் அவர்களுடைய பாட்டுக்களையே கேட்கவேணுமென்று, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை அவற்றைப் பாடுமாறு நியமித்தான் என்று நினைத்துக்கொண்டு,

## திருமலையில் அரையரை நியமித்தல் :

பகவத்ராமானுஜர் ஸ்ரீமந்நாதமுனிவம்சத்தில் தோன்றிய ஒரு அரையரை அழைத்து அவருக்குத் திருவேங்கடநாதரரையர்(=மலைகுனியநின்றுரரையர்) என்று திருநாமம் சாத்தி ''வாரீர் மலைகுனியநின்றுரரையரே இனி நீர் திருவேங்கடமலையில் நித்யவாஸம் செய்துகொண்டு ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களைத் தேவகானமுறைப்படித் தினந்தோறும் பாடி அப்பெருமானை உகப்பித்து வாரும்.

திருவேங்கடநாதன் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரைக் குறித்து, முதலாழ்வார் மூவரும் தன்னைப் பற்றி அருளிய பாசுரங்களை முதலில் பாடும்படி நேராகவே நியமித்ததனுல், இனிமேல் ஆண்டுதோறும் நடக்கும் திருவத்யயனேத்ஸவம் முதலிய காலங்களில் நாலாயிரதிவ்யப்ரபந்தம் முழுவதையும் ஓதும் ஸந்தர்ப்பங்களில் திருவேங்கடமலையாகிய திவ்யதேசத்தை முக்கியவிஷயமாகக் கொண்ட முதலாழ்வார்களின் பிரபந்தங்களை ஆரம்பித்து இயற்பா முழுவதையும் முதல் நாளில் ஓதி, மறுநாள்முதலாக ஸ்ரீரங்கநாதனுடைய திருக்கோவில்போல் பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு தொடங்கி மற்றப் பிரபந்தங்களை (முதலாயிரத்தையும் பெரியதிருமொழியையும் இருதாண்டகங்களையும்)ஓதி, அதன்பிறகு ஏகாதசி முதலாகப் பத்துநாள்களில் ஒவ்வொரு நாளும் திருவாய்மொழியில் ஒவ்வொரு பத்தாக வரிசைப் படியே ஓதி முடித்து, அதன்மறு நாளில், முன்பு நம்மாழ்வார் திருவாய்மொழி மூன்றும்பத்து மூன்றும் பதிகம் முதற்பாசுரத்தில் பாரித்த– திருவேங்கடமுடையானுக்கு எல்லாத் தேசங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் அடியவன் செய்யத்தக்க எல்லாத் தொண்டுகளையும் அவ்வாழ்வாருடைய ஆசையைப் பூர்த்திசெய்வதற்காகச் செய்துவருமவரும், முக்திபெற விரும்பும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் திவ்யப்ரபந்தானுஸந்தானம் கைகூடுவதற்காக அப்பிரபந்தங்களைப் பிரவசனம் செய்து (கற்பித்து)வருமவரும், நம்மாழ்வார் திறத்தில் மதுரகவியாழ்வார்போல் சரமபர்வநிஷ்டையை (ஆசார்ய கைங்கரியத்தில் உறுதியை) உடையவரும், அவ்வுறுதியை அறிவிக்கிற மதுரகவிகளின் திவ்யப்ரபந்தத்தை அதில் கூறியபடி ஆசரித்துக் கொண்டே ஊக்கமாக அனுஸந்தித்துவருமவரும், அவ்வுறுதியைப் பெற்றதனுலுண்டான திருவேங்கடமுடையான்கடாக்ஷத்திற்கு முக்கிய பாத்ரமாகையாலே தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்கட்கும் மதுரகவிதாஸனென்ற பெயரையே எப்போதும்தரிக்கத் தக்கதாக நியமித்தவருமான அனந்தாழ்வானுல் ஆதரத்துடன் அனுஸந்திக்கப்படுகின்ற கண்ணிநுண்சிறுத்தாம்பை முக்கியமாகத் தனியே அனுஸந்தியும்'' என்று கட்டளை செய்து அனந்தாழ்வானுக்கு ஒரு திருமுகமும் எழுதிக் கொடுத்து அந்த அரையரைத் திருமலைக்குப் புறப்படச் செய்தருளினுர்.

அதன்பிறகு அந்த அரையர் அத்திருமுகபத்திரிகையைச் சிரமேற்கொண்டு குடும்பத்துடன் சென்று திருமலை சேர்ந்து முதலில் அனந்தாழ்வானை அடைந்து ஒருவர்க்கொருவர் வணங்குதல் க்ஷேமம் விசாரித்தல் முதலியவை நடந்த பின்பு, ஸ்ரீராமானுஜமுனிவர் கொடுத்தனுப்பிய திருமுகத்தையும் அவரிடம் கொடுத்து அம்முனிவர் சொல்லியனுப்பிய செய்தி அனைத்தையும் விண்ணப்பித்தனர்.

பின்பு அனந்தாழ்வான் அத்திருமுகத்தைத் தலையால் தாங்கி மிக்க ஆதரத்துடன் ஸேவித்து (வாசித்து) மலைகுனியநின்றுரரையரோடு திருவேங்கடமுடையான் ஸந்நிதிக்குச் சென்று, 'வாரீர் திருவேங்கடநாதரே பகவத் ராமாநுஜமுனிவர் ஆழ்வார்கள் அருளிசசெய்த திவ்யப்ரபந்தங்களை ஒவ்வொருநாளிலும் திருவத்யயனேத்ஸவத்திலும் தேவரீர் திருமுன்பே அனுஸந்திக்கவேணுமென்று கட்டளையிட்டு தேவரீர் திருநாமத்தைச் சாத்தி ஒரு அரையரை அனுப்பி, ஸ்ரீமுகமும் எழுதிக் கொடுத்தனுப்பி அதன்மூலமாக, தேவரீர் ஸந்நிதியில் திவ்யப்ரபந்தம் ஓதும்படி ஏற்பாடு செய்யுமாறு அடியேனுக்கு உத்தரவிட்டிருக்கிறுர் அவருடைய உத்தரவை அடியேன் நிறைவேற்றுமாறு தேவரீர் கருணைகொண்டு அன்புடன் இசையவேண்டும்' என்று பெருமானை வேண்டி நிற்க, அப்பெருமானும் அர்ச்சகர் வாயிலாக, 'வாரீர் அனந்தாழ்வானே ஸ்ரீராமானுஜருடைய தயைக்குத் தனியிலக்கான உம்மிடத்தில்

36 ம் பக்கம் பார்க்க)

# திதிகள் நிர்ணயம்

திரு. G. சீனிவாசன்
காவிரிபட்டினம்.

சம்வத்சரம் என்பது 12 மாதங்கள் அடங்கியது. 30 நாள் கொண்ட மாதம் சாந்த்ரம், சௌரம், சாவனம் என்று மூன்று பேதங்கள் உள்ளது. இவற்றில் சில க்ஷய விருத்தியால் கூடவும் குறையவும் செய்யும். மூன்று ருதுக்கள் கொண்ட ஆறு மாதம் ஒரு அயனம் எனப்படும். இரண்டு மாதம் அடங்கியது ஒரு ருது ஆகும். ருதுக்கள் ஆறு வகைப்படும். மேலே கூறப்பட்ட மூன்று விதமான மாதங்களும் இரண்டு பக்ஷங்கள் அடங்கியது. பக்ஷம் சுக்லம், கிருஷ்ணம் என இரு வகைப்படும். இதற்கு பூர்வ பக்ஷம், அமர பக்ஷம் என்ற பெயரும் உண்டு. பக்ஷம் என்பது 15 திதிகள் அடங்கியது. அந்த 15 திதிகளும் அவற்றில் வரும் முக்கியமான பண்டிகைகளையும் அவை நிர்ணயிக்க படும் விதத்தையும் இக்கட்டுரையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

திதியானது கர்வம், தர்ப்பம், ஹிம்ஸ்ரம் என்று மூன்று வகைப்படும். ஹிம்ஸ்ரம் என்றால் க்ஷயம் உள்ளது. தர்ப்பம் என்றால் விருத்தி உள்ளது. இவை இரண்டும் இல்லாத திதிக்கு கர்வம் என்று பெயர். இவற்றின் சுற்றுதலால் திதியானது சம்பூர்ணமாகவும், கண்டமாகவும் சில சமயங்களில் ஏற்படும். சம்பூர்ணம் என்பது உதயத்தில் இருந்து மறு உதயம் வரையில் 60 நாழிகை இருக்கும் திதிக்கு பெயர். இதனை சுத்தம் என்று கூறுவதும் உண்டு. இம்மாதிரி இல்லாத திதிதான் கண்டமாகிறது.

உபவாச தான விரதாதிகளில் சர்வ தேவ காரியங்களிலும், உதயத்திலேயே சங்கல்பம் செய்ய வேண்டியது. அதனால் எந்த பூஜா விரதாதிகள் எந்த திதியில் எந்த தினத்தில் செய்யப்பட்டாலும் ப்ராதக்காலம் (காலை) சங்கல்ப காலமாகையால் காலை முதல் செய்வதாகவே அதன் கருத்து. பூஜை, விரதம் இவற்றுக்கு மத்தியான காலம் பிதுரு கர்ம காலமென்று சொல்லப்படுகிறது. மத்தியான காலம் கர்ம செய்யத் தகுந்தது. இரண்டு நாட்கள் திதி இருக்குமானால் முதல் நாள் கர்மா செய்ய வேண்டியது. இரண்டாம் நாள் அதிதி எனப்படும். ஒரே மாதத்தில் இரண்டு சுக்லபக்ஷ திதியோ, கிருஷ்ண பக்ஷ திதியோ ஏற்பட்டால் முதலில் வரும் திதி சூன்ய திதி எனப்படும்.

பிரதமை திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப் பிறகும் முதல் நாள் வரும் திதி பிரதமை என்று வழங்கப்படும். முதல் நாள் 20 நாழிகைக்கு மேல் திதி இருந்தால் அன்றுதான் கர்மா செய்ய வேண்டியது. அமாவாசையோ, பௌர்ணமியோ 7½ நாழிகை வரையில் பிரதமையில் இருந்தாலும் அன்றுதான் பிரதமை திதி அனுஷ்டிக்கப்படும். ஆவணிமாதம் பௌர்ணமிக்குப்பிறகு வரும் பிரதமையில் "காயத்ரீ ஜபம்" அனுஷ்டிக்கப்படும்.

துவிதியை திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப் பிறகும் இரண்டாம் நாள் வரக்கூடியது. மற்றபடி பிரதமை திதி நிர்ணய விதியே இதற்கும் பொருந்தும். உபவாச விஷயத்தில் துவிதியையானது யுக்ம சாஸ்திரத்தினால் பரவித்தை. வித்தை என்பது காலையிலோ மாலையிலோ முந்தின திதியோடு சேர்ந்துஇருப்பது. இதனை அனுஷ்டிக்கலாம்.

திருதியை திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப் பிறகும் மூன்றும்நாள் வரக்கூடியது. ரம்பா விரதத்தில் யுக்ம சாஸ்திரத்தினால் பூர்வ வித்தையான திருதியை எடுத்துக் கொள்ள கூடியது. வேறு விரதங்களில் ஆபஸ்தம்ப வசனத்தினால் பர வித்தையான திருதியை எடுத்துக் கொள்ள கூடியது ரம்பா விரதத்தைத் தவிர பாக்கி விரதங்களில் சதுர்த்தி யுக்தமான திருதியையே சிறந்தது. உதயாதி நாழிகையில் மீதி திதி இல்லாவிட்டால் முதல் நாள் திதியை எடுத்துக் கொள்ள வேண்டும். மாலை திருதியை இல்லாவிட்டால் ரம்பா விரதமும் மறுநாளே அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

சதுர்த்தி திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப் பிறகும் நான்காம் நாள் வரும் திதி சதுர்த்தி திதி எனப்படும். சதுர்த்தியில் விநாயகனை பூஜித்து வந்தால் சர்வ விக்னத்தினின்றும் விடுபடலாம். மேற்படி விநாயக பூஜைக்கு சதுர்த்தி முக்கியமானதாகும்.

ப்ராத காலத்தில் (காலையில்) வெள்ளை எள்ளு சேர்த்து ஸ்னானம் செய்து மத்யானத்தில் பூஜை செய்ய வேண்டியது. அதாவது 12 நாழிகைக்கு மேல் 18 நாழிகைக்குள் பூஜை செய்ய வேண்டும். திருதியையோடு கூடிய சதுர்த்தியைவிட மறுநாள் பஞ்சமியோடு கூடிய சதுர்த்தி 12 நாழிகைக்கு மேல் இருந்தால் அது மிகவும் சிறந்தது.

பஞ்சமி திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப்பிறகும்ஐந்தாம் நாள் வரக்கூடியது. 24 நாழிகைக்கு மேல் உள்ள பஞ்சமி ரிஷி பஞ்சமியாக அனுஷ்டிக்கப்படும். ஆனால் அந்த 24 நாழிகைக்கு சதுர்த்தி கலந்திருந்தால் அது ரிஷி பஞ்சமிக்கு ஏற்றது இல்லை. அதாவது சூரிய அஸ்தமன

சமயத்தில் 24 நாழிகைக்கு மேற் பட்டு 30 நாழிகைக்குள் எந்த திதி வியாபித்து இருக்கிறதோ அந்த திதி யில்தான் கர்மா செய்ய வேண்டி யது. இதனுல் முதல் நாள் சாயங் காலத்தில் குறைந்த பஞ்சமியாலும் இரண்டு நாளும் மாலே (சாயங்காலம்) இல்லாவிட்டாலும் மறுநாள்தான் ரிஷி பஞ்சமி விரதாதிகள் செய்ய வேண்டும் மாலேயில் சஷ்டி இருந் தால் பஞ்சமிக்கு சஷ்டிவேதை என்று சொல்லப்படும். ரிஷி பஞ்சமி விர தானுஷ்டானம் புராணங்களில் சங் கல்ப காலம் முதல் உபவாசம் இருந்து மறுநாள் காலே ஸ்னனம் செய்து பூஜை செய்து பிறகு தானம் செய்ய வேண்டும்.

சஷ்டி திதி :

அமாவாசைக்கும்பௌர்ணமிக்கும் பிறகு ஆருவது நாள் சஷ்டி திதி வரும். லிங்க புராணத்தில் சஷ்டி திதி கூறப்பட்டுள்ளது. இது கந்த சஷ்டியாக அனுஷ்டிக்கப்படுகிறது. அந்த சஷ்டி கண்ட திதியாக இரண்டு நாட்களில் ஏற்பட்டால் பஞ்சமி வித்தையான சஷ்டியை எடுத்துக் கொள்ள வேண்டும். கந்த சஷ்டி விரதத்தை தவிர மற்ற விரதங்களில் சப்தமி வித்தையான சஷ்டி யையே எடுத்துக் கொள்ள வேண்டும். பஞ்சமி 12 நாழிகையும் சப்தமி 15 நாழிகையும் சஷ்டியை தோஷமுள்ளதாக மாற்றுகின்றன. எனவே 12 நாழிகை பஞ்சமி வேதை யுள்ள சஷ்டி கந்த வாரத்திற்கு ஏற் றது அல்ல.

சப்தமி திதி :

அமாவாசைக்கும் பௌர்ணமிக் கும் பிறகு ஏழாவது நாள் வரக் கூடி யது. சப்தமி விரதங்களில் கண்ட திதியானுல் முதல் நாள் வித்தையான திதி மிகவும் சிறந்தது. பஞ்சமி திதி நிர்ணயத்தில் கூறிய விதிகள் இதற் கும் பொருந்தும். ரத சப்தமி புண் ணிய காலத்தில் ஸ்நானம் செய்து நித்திய கர்மானுஷ்டானத்தை முடித் துக் கொண்டு பூஜை செய்ய வேண் டும். பிறகு ஒரு பிராமணருக்கு போஜனம் செய்வித்து தான தருமங் கள் செய்யும்படி சாஸ்திரங்கள் கூறு கின்றன. இந்த ரத சப்தமியின் மறு நாள் அஷ்டமியில் பீஷ்மாஷ்டமி அனுசரிக்கப்படும்.

அஷ்டமி திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர் ணமிக்குப் பிறகும் எட்டாவது நாள் வரக்கூடியது. ஆவணி மாதத்தில் கிருஷ்ண பக்ஷத்தில் கிருஷ்ண ஜன் மாஷ்டமி (கோகுலாஷ்டமி) அனுஷ் டிக்கப்படும். கிருஷ்ண ஜன்மாஷ் டமியில் உபவாசம் இருந்து கிருஷ் ணனே பூஜிக்க வேண்டும். ரோகணி நட்சத்திரத்துடன் கூடிய அஷ்டமி யானது நடு இரவு வரை காணப்பட் டால் அன்றுதான் கிருஷ்ணன் பிறந்தநாளாகக் கருதப்படும். விஷ்ணு வானவர் தானே அவதரித்த நாள் இது.

நவமி திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர் ணமிக்குப் பிறகும் ஒன்பதாவது நாள் வருவது நவமி திதி. சைத்ர (சித் திரை) மாதத்தில் புனர்வசு நட்சத் திரத்துடன் கூடிய நவமியானது மிக வும் சிறப்பானது. ஸ்ரீராம நவமி அனுஷ்டிக்கப்படுவது இந்த காலத் தில்தான். சரஸ்வதி பூஜையில் மூல நட்சத்திரம் முதல் மூன்ருவது நட் சத்திரமான உத்திராட நட்சத்திரத் துடன் கூடிய நவமியானது மகா நவமி என்று வழங்கப்படும். இந்த மகா நவமியில்தான் துர்காதேவி யானவள் மகிஷாசுரனே வதம் செய் தாள் என்று புராணம் கூறுகிறது.

தசமி திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர் ணமிக்குப் பிறகும் பத்தாவது நாள் வரக்கூடியது. சரஸ்வதி பூஜைக்கு அடுத்த நாள் தசமி திதியில் விஜய தசமி கொண்டாடப்படும். எந்த காரணத்தினுலும் முன் திதியிலும் அடுத்த திதியிலும் தசமி சேர்ந்து



ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் திருக்கோவில் - காஞ்சிபுரம்
திரு. எஸ். ஜி. சேஷகிரி - கோவை.



ஸ்ரீ நடராஜசுவாமி கோயில் திருக்குளம் - சிதம்பரம்
திரு. வி. முத்துராமன் - கோவை

இருந்தாலும் அதனை அனுஷ்டிக்கலாம். ஆனால் மாலை சூரிய அஸ்தமனத்தின்போது தசமி இருக்க வேண்டியது அவசியமாகும். விஜய தசமியன்று ச்ரவண நட்சத்திரம் இருக்க வேண்டியது அவசியம்.

ஏகாதசி திதி :

அமாவாசைக்கும் பௌர்ணமிக்கும் பிறகு பதினொன்றும் நாள் வரக் கூடியது. இது சாதாரணமாகவே உபவாச திதியாக கருதப்படும். ஏகாதசியில் உபவாசம் இருந்து துவாதசியில் பாரணம் செய்ய வேண்டும். எவன் ஒருவன் பரம பதத்தை இச்சிகின்றானோ அவன் ஏகாதசியில் உபவாசம் இருந்து வந்தால் அவனுக்கு ஸ்ரீ வைகுண்டம் கிடைப்பது உறுதி என்று நாரத பெருமான் கூறுகிறார். மார்கழி மாத கிருஷ்ண பக்ஷம் வரும் ஏகாதசி "வைகுண்ட ஏகாதசி" என்று அழைக்கப்படும்.

துவாதசி திதி :

அமாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப் பிறகும் பனிரெண்டாம் நாள் வரக் கூடியது. ஏகாதசியில் உபவாசம் இருந்தவர்கள் இந்த திதியில் அருணோதயத்தில் ஸ்நானம் செய்து பூஜைசெய்து பிறகு பாரணம் செய்ய வேண்டும். இவ்வாறு செய்தால்தான் உபவாசம் முழுப் பலனை கொடுக்கும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. திரயோதசியுடன் கூடிய துவாதசியில் உபவாசம்இருந்து பாரணம் செய்வது சிறப்பானதாகக் கருதப்படுவது இல்லை.

திரயோதசி திதி :

அமாவாசைக்குப் பிறகும் பௌர்ணமிக்குப் பிறகும் பதிமூன்றும் நாள் வருவது திரயோதசி திதியாகும். உபவாசங்கள் ஏதும் திரயோதசியில் சொல்லப்படுவது இல்லை. இதற்கான தனி நிர்ணய விதி கிடையாது.எல்லா திதிகளையும் போன்றே 24 நாழிகைக்கு மேல் இருந்தால் அன்று திரயோதசி திதி அனுஷ்டிக்கப்படும். உபவாச நாளின் முன்னும் பின்னும் வந்தால் அந்த உபவாசம் மத்திமமாகக் கருதப்படும்.

சதுர்தசி திதி :

அமாவாசைக்குப் பௌர்ணமிக்கும் பிறகு பதிநான்காம் நாள் வரும் திதி. திரயோதசியுடன் கூடிய சதுர்தசி சிவனை வணங்க சிறந்த நாளாகக் கருதப்படும். பிருகு மகரிஷி சிவராத்திரி சதுர்தசி பூர்வ வித்தையாக இருந்தால் எடுத்துக் கொள்ளக் கூடியது என்று கூறுகிறார். பரமசிவன் சதுர்தசியின் நடு இரவில் லிங்க ரூபமாக அவதரித்தார். எனவே நடு இரவில் வரும் சதுர்தசியானது சிவராத்திரியுடன்கூடி அனுஷ்டிக்க தகுந்தது. சிவராத்திரி விரதம் ஞாயிற்றுக் கிழமையிலும், செவ்வாய் கிழமையிலும் வருவது மிகவும் சிறப்பானது ஆகும்.

பௌர்ணமி :

அமாவாசைக்குப் பிறகு பதினைந்தாம் நாள் வருவது. ஆவணி மாத பௌர்ணமியில் 'ஆவணி அவிட்டம்' அனுஷ்டிக்கப்படும். பௌர்ணமியிலும் உபவாசம் இருந்து விரதம் அனுஷ்டிக்கலாம். 24 நாழிகைக்கு மேல் பௌர்ணமி இருந்தால்தான் பௌர்ணமி திதி கர்மா செய்ய வேண்டும்.

அமாவாசை :

பௌர்ணமிக்குப் பிறகு பதினைந்தாம் நாள் வருவது. ஐப்பசி மாத அமாவாசையில் 'தீபாவளி' பண்டிகை அனுஷ்டிக்கப்படும். அன்று தான் கேதார கௌரி விரதம் கொண்டாடப்படும். பிதுருக்களுக்கு அமாவாசையில் தர்ப்பணம் செய்ய வேண்டும். அமாவாசை சில சமயங்களில் முதல் நாள் மாலை முதலே வருவதுண்டு. அன்று போதாயன அமாவாசை அனுஷ்டிக்கப்படும்.

இவ்வாறு 15 திதிகளையும் அவற்றில்வரும் பண்டிகைகளையும், விரதங்களையும் கர்மா செய்ய திதி நிர்ணயத்தையும் இக்கட்டுரையில் , விரிவாக சாஸ்திரங்களில் கூறியுள்ளபடி எழுதப்பட்டுள்ளது.



# தஞ்சைத் தலங்கள் சிலவற்றின் இதிகாசத் தொடர்பு

*த*ஞ்சை மாவட்டத்தில் இராமாயணக்கதையை மையமாகக் கொண்டு பல ஊர் பெயர்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு ஊரைப் பற்றியும் ஏதாவது ஒரு கதை வழங்கி வருகிறது...! உதாரணமாக...

**வலங்கைமான் :**

சீதையின் பொருட்டு இராமன் மானாக உருவெடுத்து வந்த மாரீசனை—பொய் மானை விரட்டிக் கொண்டு வந்த போது—அம்மான் இவ்வூரில் வலப்புறமாகவே ஓடியது என்றும் அதனால் இவ்வூர் வலங்கைமான் எனப் பெயர் பெற்றது என்பர்.

**பாடகச்சேரி :**

இராவணன் சீதையை கவர்ந்து செல்லும்போது, சீதை இராமனுக்குத் தன்னைத் தூக்கிச் செல்லும் இடம் தெரிய வேண்டும் என்பதன் பொருட்டு ஒவ்வொரு அணிகலன்களாக கழற்றி வீசி வந்தாள் எனவும் அதுபோது பாடகம் என்னும் அணி விழ்ந்த இடம் பாடகச்சேரி ஆயிற்று என்பர்.

இனி மகாபாரதக் கதைகள் சார்பான சில ஊர் பெயர்களைப் பார்ப்போம்.

**விழுந்தமாவடி :**

பாண்டவர்கள் வனவாசத்தின் போது ஒருநாள் காட்டு வழியே செல்லும் போது ஒரு மாமரத்தின் கீழ் முனிவர் ஒருவர் தவம் செய்து கொண்டிருந்தாராம். மரத்தில் ஒரே ஒரு மாங்கனி இருக்க திரௌபதி அதை விரும்பி கணவர்மார் ஒவ்வொருவரிடமும் கேட்க, அனைவரும் 'அது முனிவரின் உணவிற்கு உரிய பழம். ஆகவே அதைப் பறிக்கலாகாது' எனக்கூற; அர்ச்சுனன் மட்டும் அதை மீறி மாங்கனியைப் பறித்துத் தர, செய்தி அறிந்த தருமர் மனம் வருந்தி, முனிவரின் சாபத்திலிருந்து தப்பும் பொருட்டு, கிருஷ்ணனை நாட, அவர், 'உங்கள் மனதில் இதுவரை மற்றவர்களுக்குத் தெரியாமல் மறைத்து வைத்திருந்த செய்தியை வெளிப்படையாகச் சொல்வீர்களானால், மாங்கனி தானே மரத்தில் ஒட்டிக்கொள்ளும்' எனக் கூற, அனைவரும் அவ்வாறே கூற மாங்கனி கொஞ்சம் கொஞ்சமாக மேலேறியது. இறுதியில் திரௌபதியின் முறை வரும் போது; அவளும் சில செய்திகளைச் சொல்லி அவ்வளவுதான் என நிறுத்த, உயரே சென்றிருந்த மாங்கனி கீழே விழுந்து விட்டது. எல்லோரும் திகைத்து கண்ணனை நோக்க, கிருஷ்ணனும் திரௌபதியை நோக்கி, 'நீ ஏதோவொரு செய்தியை மறைத்து விட்டாய்...அதனால்தான் மாங்கனி கீழே விழுந்து விட்டது. அந்த மறைத்த செய்தியை மீண்டும் நீ கூறினால் மாங்கனி மீண்டும் சென்று ஒட்டிக் கொள்ளும்' என்று கூற; திரௌபதியும், தன் சுயவரத்தின் போது, பாண்டவர்கள் அந்தணர் உருவில் இருக்க; எல்லா அரசர்களும் தன்னை மணப்பதற்காக வைத்திருந்த இலக்கை விழ்த்தாமல் போய்விட; கர்ணன் வந்த போது; அவனின் தோற்றம் கண்டு இவனே இலக்கை விழ்த்தக் கூடியவன் என நினைத்து அவனையே மாப்பிள்ளையாக நினைத்து மயங்கியதைக் கூறினாள். மறு நிமிடம் கீழே விழுந்த மாங்கனி உயரே சென்று மரத்தில் ஒட்டிக்கொண்டதாம். இவ்வாறு மாங்கனி கீழே விழுந்து எழுந்தமையால், விழுந்து எழுந்த மாவடி என்ற பெயர் இவ்வூருக்கு ஏற்பட்டதாம்...!

'ராஜேஸ்வரி'
*திருச்சி—18.*

**வேடம்பூர் :**

பாண்டவர்கள் வனவாசத்தின் போது, இறைவன் வேடனாக வந்து அர்ச்சுனனை, எதிர்த்தமையால் இப்பெயர் பெற்றது என்பர். இதற்குச் சான்றாக இவ்வூர் இறைவனின் பெயரை —வேடம்புரீஸ்வரர் என உள்ளதை காட்டுவர்.

**திருவாளபுத்தூர்:**

அர்ச்சுனன், பாண்டவர் வனவாசத்தின் போது, தன்னுடைய ஒளி பொருந்திய வாளாயுதங்களை இங்குள்ள புற்றுள்ளே ஒளித்து வைத்தமையால் பெற்ற பெயர் இந்தப் பெயர் என்பர்.

இனி சிவனை மையமாக வைத்து பெயர் பெற்றுள்ள ஓர் ஊரைக் காண்போம்...

**அகத்தியன்பள்ளி :**

இறைவனின் திருமணம் நடைபெற திருமணத்திற்கு உலகின் எல்லா இடத்திலிருந்தும் மக்கள் வரவே, கயிலாயம் அதிகப்பளுவினால் பூமிக்குள் செல்ல இறைவன் வடதிசை உயர்ந்து தென்திசை தாழ்வதால் அதை சரிசெய்யும் பொருட்டு; அகத்தியமாமுனிவரைத் தென்திசை செல்லும்படி பணிக்க; அகத்தியர் யான் மட்டும் உம் திருமணக்கோலம் காணக் கூடாதோ எனக் கேட்க இறைவன் 'தென்திசையில் நீ விரும்பிய இடத்தில், யாம் எம் மணக்கோலம் காட்டுவோம்' எனவருளி அவ்வண்ணமே வேதாரண்யத்தில் அகத்தியருக்கு மணக்கோலம் காட்டினாரென்பர். அதுபோது இறைவன் அகத்தியருக்கு மணக்கோலம் காட்டிய இடம் வேதாரண்யம் எனவும்; அகத்தியர் தென்திசையில் தங்கி இறைவனை வழிபட்ட இடம் அகத்தியன் பள்ளி எனவும் தல வரலாறு கூறுகிறது.

சில நூல்களை ஆதாரமாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப்பட்டது. ★

# ★ எல்லோரா குகைகள் ★

ஔரங்காபாத்திற்கு வடமேற்கில் 14 மைல் தொலைவில் உள்ளன எல்லோரா குகைகள். இங்கு மிகப் பெரிய அளவில் பௌத்த மற்றும் ஜைன சிற்பங்கள் உள்ளன. சுற்றுப்பக்கங்களில் உள்ள மற்ற எல்லா குகைச் சிற்பங்களை விட இங்குள்ளவை பெரிதாக உள்ளன. எல்லோரா என்ற பெயர் எலபுரா


திரு. என்..ராமகிருஷ்ண
மயிலாடுதுறை


என்ற சொல்லில் இருந்து ஏற்பட்டது. இதற்கு ''வெருலே'' என்ற பெயரும் உண்டு; மலைப்பகுதியில் சுமார் $1\frac{1}{4}$ மைல் நீளத்திற்கு வளைவாக அமைந்துள்ளன. பௌத்த குகைகள் தெற்குப் பக்கத்திலும், வடக்குப் பக்கத்தில் ஜைன குகைகளும் உள்ளன. இவைகளின் நடுவில் உள்ள குகைகளை பிராம்மண குகைகள் என்று கூறுவர். 12 பௌத்த குகைகளும், 17 பிராம்மண குகைகளும் 5 ஜைன குகைகளும் உள்ளன. கைலாச குகைகள், தசாவதார குகைகள் என்று கூறப்படுகின்றன. கைலாசக் கோவில் ஒன்று உள்ளது. 10-ம் நூற்றாண்டில் மாசூதி என்ற அரேபிய பூகோள விற்பன்னர் இவை பற்றி எழுதியுள்ளார். பிரிஷ்டா என்ற சரித்திர ஆசிரியரும் இவைப் பற்றி கூறியுள்ளார். கி.பி.1667ல் பல வெளிநாட்டவர் இங்கு வந்துள்ளார்கள் எனச் சரித்திரம் கூறும். தென்பகுதியிலுள்ள பௌத்த குகைகளின் காலம் கி. பி. 350-550 சில பௌத்த குகைகளுக்கு ''தேடவாட'' குகைகள் எனப் பெயர் வழங்கப்படுகின்றன. தேரவாரா என்ற பௌத்த ஆசிரியர்களின் பெயரே தேடவாட என்று பிற்காலத்தில் திரியுற்றது. மற்றொரு செய்தியின் மூலம் இங்கு ''தேடால்'' என்ற வகுப்பினர் வசித்ததால் இப்பெயர் ஏற்பட்டது. முதல் குகைக்கு



புத்தர் சிலை

''விஹாரா'' என்று பெயர். இதில் பௌத்த பிக்குகளுக்கு 8 அறைகள் உள்ளன. இரண்டாவது விஹாரம் தொழுவதற்காக அமைக்கப்பட்டுள்ளது. இங்குத் துவார பாலகர் உருவங்கள் பெரிய அளவில் உள்ளன. முன்பக்கமுள்ள தூண்களில் சிற்பங்கள் உள்ளன. பின்புறச் சுவற்றில் மிகப் பெரிய 11 அடி உயரமுள்ள புத்தர் சிலை உள்ளது. மற்றொரு குகையில் புத்தர் தாமரை மீது அமர்ந்தது போன்ற உருவம் உள்ளது. மற்றொரு குகையில் புத்தர் ஒரு மரத்தடியில் அமர்ந்துள்ளார்; 5-வது குகைக்குப் பெயர் ''மஹர் வாடா''. இதுதான் எல்லாவற்றிலும் மிகப் பெரியது. இதுதான் சொற்பொழிவுக் கூடமாக இருந்தது. 10-வது குகைக்குப் பெயர் ''விஸ்வ கர்மா குகை''. இங்கு அடிக்கடி மர வேலை செய்யும் தச்சர்கள் வழிபாடு செய்வார்களாம். பெர்கூஸன் என்ற பிரசித்தி பெற்ற சரித்திர ஆராய்ச்சியாளர் இக்குகைகளைப் பற்றி சிறப்பாக எழுதியுள்ளார். இதன் நீளம் 85 அடி; அகலம் 43 அடி; உயரம் 34 அடி. இதன்



கைலாசக் குகைகள்



பெரிய உருவச் சிலைகள்

பிரதக்ஷிணம் செய்ய இடம் ஒதுக்கப் பட்டுள்ளது. இங்கு சைவ சிற்பங் கள் உள்ளன. மஹிஷாசுரி, சிவன் பார்வதி தாயம் ஆடுதல், சிவதாண் டவம், இராவணன் கயிலாய மலையை எடுத்தல், பைரவர் முதலிய உருவங் களைக் காணலாம். புலியின் மீது சூலத்துடன் பவானி அம்மன் காணப் படுகிறாள். தாமரைகள் நடுவில் லக் குமி, வராஹ அவதாரம், வைகுண் டத்தில் விஷ்ணு உட்கார்ந்த கோலம் மற்றும் இலக்குமி விஷ்ணு சேர்ந்து இருத்தல் போன்ற பல உள.

15-ம் குகைக்குப் பெயர் தசாவ தார குகை. இதில் வடமொழி கல்

28-ம் பக்கம் பார்க்க.



கைலாயம்

காலம் கி.பி.600 என்று பெர் கூஸன் எழுதியுள்ளார். இதனுள் செல்ல படிகள் உள்ளன. இதில் உள்ள பல தூணிகள் "குதிரை லாட" வடிவில் வெட்டப்பட்டுள்ளன. பிரம்மாண்டமான புத்தர் உருவம் அமர்ந்த கோலத்தில் உள்ளது. மேல் தளம் ஓர் சிற்பக்களஞ்சியமாக அமைந்துள்ளது. 11வது குகைக்கு "தோ-தால்" குகை என்று பெயர் பெற்றுள்ளது. இது இரண்டு அடுக்கு களாக உள்ளது. 1876ல் மூன்றாவது அடுக்கும் கண்டு பிடிக்கப்பட்டது. நடுப்பாகத்தில் 8 தூண்கள் உள்ளன. 12வது குகைக்குப் பெயர் "தீன் தால்" - மூன்று அடுக்குகள் கொண் டது. இதில் 115 அடி நீளம் 43 அடி அகலமுள்ள விசாலமான முற்றம் உள் ளது. இரண்டாவது அறையின் நீளம் 42 அடி; அகலம் 35 அடி. இதன் வழி யாக 11 அடி உயரமுள்ள புத்தர் கோவிலுக்குச் செல்லலாம். மேல் மாடி 115 அடி நீளம் 70 அடி அகலம். இதில் 3 வரிசையில் 9 தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. இரு பக்க சுவர்களிலும் புத்தர் உருவங்கள் உட்கார்ந்த கோலத்தில் உள் ளன. இவை "மஹாயான" வகை யைச் சார்ந்த பௌத்தர்களால் வணங்கப்பட்டு வந்தன. காலம் கி.பி 700. இம்மாதிரி 16 குகை கள் உள்ளன. அவைகளை Brahminical Caves என்று கூறுவர். இந்தக் குகைகள்தான் சிற்பக்கலையில் சிறந்து விளங்குகின்றன. பல தர்ம சாலைகள் காணப்படுகின்றன. இவை யாத்ரீகர்கள் தங்க கட்டப்பட்டன.

14வது குகைக்குப் பெயர் "இரா வணுகாகாய்". 54 அடி 55 அடி அகலம் கொண்ட அறையைச்சுற்றி



இராமாயணச் சிற்பங்கள்



# வைணவம்

இந்து சமயத்தின் இரு கண்களாகச் சைவமும் வைணவமும் திகழ்கின்றன. எழுபத்திரண்டு சமயங்களாகத் தம் காலத்தில் விரிவுபட்டிருந்த சமய நெறிகளை ஆதிசங்கரர் சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணபத்யம், சௌரம் என ஆறு சமய நெறிகளாகக் குறுக்கினுர். அதனுலேயே 'அறுசமய நிறுவனர்' (ஷண்மத ஸ்தாபனுசாரியார்) என இன்றும் அவர் போற்றப்படுகிறுர். இவ்வறுவகைச் சமயங்களை இன்னும் குறுக்கினுல் அவை சைவமும் வைணவமுமாகவே எஞ்சும். ஏனெனில் இவ்வறுவகைச் சமயச் சிறப்புக்களும் இவ்விரண்டினுள்ளேயே அடங்கி நிற்கின்றன. உண்மையில் இவ்விரண்டு சமயங்களே தொன்மைச் சமயங்கள். இவற்றிலிருந்தே பின்னர் பற்பல சமய நெறிகளும் கிளைத்தன. அன்றியும், இவ்விரண்டு சமயங்களே பின்னர் இந்து சமயம் என்ற பொதுப் பெயரையும் பெற்றன.

திருமாலாகிய விஷ்ணுவோடு சம்பந்தம் உடையது வைணவம் (வைஷ்ணவம்). எங்கும் வியாபித்து நிற்பவன் என்ற பொருளிலேயே 'விஷ்ணு' என்ற சொல்லை வேதம் கையாள்கிறது ('வியாப்னோதி இதி விஷ்ணு:) இதனை இன்னும் விரிவுபடுத்தி எங்கும் பரந்தவர், நன்மை தருகிறவர், மாயையிலிருந்து அகற்றுபவர், எல்லாப் பொருள்களின் உயிர் நாடியாய் இருப்பவர் என நான்கு பொருள்களை 'விஷ்ணு' என்ற சொல்லிற்கு வைணவ உலகம் காணும். எங்கும் பரந்திருப்பதோடு, எல்லாவிடங்களிலும் வசிப்பவனுகவும் திருமாலை வேதம் குறிப்பிடுகிறது ('ஸர்வத்ர வஸதி இதி வாஸுதேவ:') இவ்வாறு எங்கும பரந்து என்றும் நிலைத்திருக்கும் பரம்பொருளையே திருமாலாக வைணவ உலகம் கொண்டாடுகின்றது.

### தமிழும் வைணவமும் :

வைஷ்ணவ நெறி வடமொழியைப் போலத் தமிழுக்கும் மிகப் பழமையான நெறி. வடமொழி வேதங்களில் போலத் தமிழின் மிகப் பழமையான நூல்களிலே திருமால் நெறி மிகப் பரக்கப் பேசப்பட்டிருக்கின்றது. இன்று கிடைத்திருக்கும் தமிழ் நூல்களில் முதன்மையான தொல்காப்பியம் "மாயோன் மேயக் காடுறை உலகமும்" எனத் திருமாலை முல்லை நிலக் கடவுளாகக் குறிப்பிடுகின்றது. சங்க நூல்களில் ஒன்றுன பரிபாடல் திருமாலின் பல்வேறு அவதாரங்களைப் பாடுகின்றது. வாசுதேவன், சங்கருடணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்னும் திருமாலின் நான்கு வியூக நிலைகள்,

"செங்கண் காரி! கருங்கண் வெள்ளை!
பொன்கண் பச்சை! பைங்கண்
மாஅல்!"

என இதில் குறிப்பிடப்படுகின்றன. அன்றியும், ஒவ்வொரு பொருளிலும் அதனதன் தன்மையாய் மால் இயைந்திருப்பதை,

"தீயினுள் தெறல் நீ! பூவினுள்
நாற்ற நீ!
கல்லினுள் மணியும்நீ! சொல்லினுள்
வாய்மை நீ!
அறத்தினுள் அன்புநீ! மறத்தினுள்
மைந்துநீ!"

என்ற பரிபாடல் அடிகள் மிக அழகாகக் காட்டுகின்றன.

இவற்றிற்குப் பிற்பட்ட சிலப்பதிகாரம், இளங்கோவடிகள் என்ற சமணத் துறவியால் செய்யப்பட்டாலும், அக்கால வைணவ நிலையை மிகச் சிறப்பாகப் படம்பிடித்துக் காட்டுகிறது. திருவரங்கத்தில் திருவமர் மார்பனுகிய பெருமாள் கிடந்த வண்ணத்தையும், திருவேங்கடத்தில் செங்கண்மால் நின்ற வண்ணத்தையும் முதன் முதலில் இந்நூலே மிக விரிவான சொல்லோவியம் ஆக்கிக் காட்டுகின்றது.

"நீல மேகம் நெடும்பொன் குன்றத்துப்
பால்விரிந்து அகலாது படிந்தது போல,
ஆயிரம் விரித்தெழு தலையுடை
அருந்திறல
பாயற் பள்ளிப் பலர்தொழுது ரத்த;
விரிதிரைக் காவிரி வியனபெரு
துருத்தித்

டாக்டர். இரா. தண்டாயுதம்
மலேசியா

திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்
விங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை,
விரிகதிர் ஞாயிறும் திங்களும்
விளங்கி,
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத்
தானத்து,



திருமலையில் மோகினி அவதாரத்தில் உற்சவர்

மின்னுக்கோடி உடுத்து, விளங்குவில்
பூண்டு,
நன்னிற மேகம் நின்றது போலப்
பகைஅணங்கு ஆழியும், பால்வெண்
சங்கமும்,
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி,
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு,
பொலம்பூ ஆடையின் பொலிந்து
தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற
வண்ணமும்''

என்பது அச்சொல்லோவியம். கரிய மேகம் உயர்ந்த பொன்மலையில் படிவது போலப் பாம்பணைப் பள்ளியில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமன் முற்பகுதியிலும், நல்ல நீல நிறத் தினையுடைய மேகம் மின்னலாகிய புது ஆடையை உடுத்தது போன்ற கோலத்துடன் தாமரைக் கைகளில் சங்கு சக்கரமேந்தி நின்றிருக்கும் பெருமாள் பிற்பகுதியிலும் இதில் காட்டப் பெற்றுள்ளனர். பேர் ஆயிரம் படைத்த பெருமாளின் இத் திருக்கோலங்களின் புகழைக் கேளாத செவிகளும், பாடாத நாக்களும், காணாத கண்களும் பயனற்றவை என்பது இக்காவியம் உணர்த்தும் மற்றொரு உண்மையாகும்.

'' மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா
வகைமுடியத்
தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங்
கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்
லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன
செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன
செவியே?

பெரியவனை மாயவனைப் பேருலகம்
எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக்
கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும்
செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன
கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்
ணென்ன கண்ணே?

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார்
வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசை
யும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத்
தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன
நாவே
நாராயணா வென்னா நாவென்ன
நாவே?''

என்ற பகுதியால் இதனை உணரலாம். திருமாலின் பெருஞ்சிறப்புக்களும், அவதார மகிமைகளும் மக்களிடம் எந்த அளவிற்குச் செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதை இப்பகுதிகள் மிகத் தெளிவாகக் காட்டுகின்றன.

இதற்குப் பின் வந்த பக்தி இயக்க காலம், வைணவம் தமிழோடு இரண்டறக் கலந்த காலம். முன்னைய கால கட்டங்களை அரும்புக் காலமென்றும், மலர்க் காலமென்றும் கொண்டால் இதனைக் கனிக்காலம் எனலாம். இக்கால கட்டத்தில் தோன்றிய ஆழ்வார்களின் அருளிச் செயல்களால் வைணவம் கனிந்து நின்றது. திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனும் இத்தமிழ்

கேட்டுக் களித்து நின்றான். எத்தனையோ வெற்றிகளைப் பெற்றபோது அடையாத பூரிப்பைச் சடகோபர் தமிழ் கேட்டுத் திருமால் அடைந்ததாக,

> அருமறை துணிந்த பொருள்முடிவை இன்சொல்
> அமுது ஒழுகுகின்ற தமிழினில் விளம்பி
> அருளிய சடகோபர் சொற்பெற்று உயர்ந்தன,
> அரவணை விரும்பி அறிதுயில் அமர்ந்த
> அணிதிரு அரங்கர், மணிதிகழ் முகந்தர்,
> அழகிய மணவாளர் கொற்றப் புயங்களே''

என ஒரு பெரியார் பாடுகிறார். அந்த அளவிற்குத் திருமாலும் வைணவமும் தமிழோடு கலந்து நின்றனர். அவ்வாறு கலக்கக் காரணமானவை ஆழ்வார்களின் அருளிச் செயல்கள்.

ஆழ்வார்கள் இறைவனுடைய வடிவழகிலே ஈடுபட்டு அழுந்தினவர்கள்; இறைவனை மறந்து மக்கள்படும் துன்பத்தைக் கண்டு பொறாமல் அத்துன்பத்தில் அழுந்தினவர்கள். அருளே வடிவானவர்கள். காலங் காலமாகத் தவம் செய்து காலத்திற்கும் எட்டாதவற்றையும் அறிய வல்லவர்களான முனிவர்களைவிடப் பன்மடங்கு மேலானவர்களாக ஆழ்வார்களை வைணவ உலகம் போற்றுகின்றது. முனிவர்களின் அறிவு எவ்வளவு மேலானதாயினும், அது தவத்திற்கேற்பவே அமையும். எனவே அது அளவுபட்ட அறிவு. ஆழ்வார்களுடைய அறிவோ அளவுபடாதது. இயல்பாகவே பெருக்கெடுத்தோடும் சிறப்புடையது. இறைவனுடைய அருளாலேயே இத்தகைய அறிவு வாய்த்ததாகலின், அவர்களுடைய அருளிச் செயல்களெல்லாம் தமிழ் வேதமாகவே போற்றப்படுகின்றன. கற்கவும் ஓதவும் புரிந்து கொள்ளவும் அரிதான வேதங்களை அருமை நீங்கித் தமிழில் வந்து எளியனவாகி ஏற்றம் பெற்றனவென வைணவச் சான்றோர்கள் கூறுகின்றனர்: 'ஆசார்ய இருதயம்' என்னும் நூல் இன்னும் ஒரு படி மேலே போய் வேதம் மண்குடமென்றால், ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் பொற்குடம் என்கின்றது.

ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிய திவ்வியப் பிரபந்தத்தின் சாரமாக அன்பு நெறியும், அருள் நெறியும், கைங்கரிய நெறியும் விளங்குகின்றன. ஆறு கடலை நோக்கு வது போல, சூரியகாந்திப் பூ கதிரவனை நோக்குவது போல, உயிர் தருமனுகிய யமனையே நோக்குவது போல, உண்மை உணர்வு எப்போதும் திருமாலையே நோக்கி நிற்கும் என இத்தமிழ் வேதம் அறுதியிட்டுக் கூறுகின்றது.

> '' பெயருங் கருங்கடலே நோக்கும் ஆறு; ஒண்பூ
> உயருங் கதிரவனே நோக்கும்; உயிரும்
> தருமனையே நோக்கும்; ஒண்தாமரையாள் கேள்வன்
> ஒருவனையே நோக்கும் உணர்வு''

என்பது பொய்கையாழ்வார் திருப்பாடல். எவ்விடத்தும் எப்பொருளிலும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளின் இயல்பையும், உயிர்வாழ்வின் பயனையும் இவ்வருளிச் செயல்களை நாளும் ஓதுவதன் மூலம் தெளியலாம்.

ஆழ்வார்கள் உணர்த்திய அன்பு நெறி அதற்குப் பின் தழைத்துத் தமிழ் நூல்களில் எல்லாம் பக்தி மழையாகப் பொழிந்து கொண்டுள்ளது. அன்புநெறியின் இலக்கணமாகத் திகழும் இவ்வருளிச் செயல்களுக்குப் பின்னர் தோன்றிய ஆசாரியர்கள், இலக்கியமாகவே வாழ்ந்து காட்டினர். இலக்கணமும் இலக்கியமும் இவ்வாறு ஒன்றித்து நிற்கும் போதே திருமால் நெறியாகிய வைணவமும் முழுமையடைந்து முழுமணியாக ஒளி வீசி நிற்கின்றது எனலாம்.



கருடவாகனத்தில் உற்சவர்

பரம்பொருள் :

எங்கும் பரந்து என்றும் நிலைத்துள்ள பரம்பொருள் திருமாலே என்பது வைணவத்தின் முடிந்த முடிபு. அதனாலேயே திருமால் ஆதிதேவன் என அழைக்கப்படுகின்றார். ஆதிதேவன் என்று அழைக்கப் பட்டாலும் அவர் தொடக்கமில்லாதவர். அநாதியானவர். அவ்வாறே முடிவும் இல்லாதவர். அவர் பள்ளி கொண்டிருக்கும் ஆதிசேடன் (ஆதிசேஷன்) சக்தியின் சின்னம். சேஷம் என்பதற்கு எஞ்சியிருப்பது எனப் பொருள். பிரளய காலத்தில் உலகமெல்லாம் அழிந்துபட்டாலும் எஞ்சியிருப்பது இச்சக்தியும், இச்சக்தியின் மேல் பள்ளி கொண்டிருக்கும் பெருமாளுமே என்பதையே இத்திருக்காட்சி விளக்கி நிற்கின்றது. ஆதிசேடனுகிய அப்பாம்பு ஐந்து தலைகளையுடையதாகவும் ஆயிரம் தலைகளையுடையதாகவும் படைக்கப்பட்டிருப்பதற்கும் ஆழ்ந்த பொருள் உண்டு. ஐந்து தலைகள் பஞ்சபூதங்களைக் குறிக்கும்: ஆயி

ரம் தலைகளோ எண்ணற்ற உயிர்களின் அடையாளம். தீயில் சூடு இருப்பது போல மூலப் பிரகிருதியானது பரம்பொருளை இருப்பிடமாய்க் கொண்டிருப்பதையே இந்த அனந்தசயனக் காட்சி நமக்கு உணர்த்திக் கொண்டுள்ளது.

காக்கும் கடவுளான திருமால் படைக்கும் ஆற்றலையும் யுகமுடிவில் உயிர்களை ஒடுக்கும் ஆற்றலையும் பெற்றுள்ளார் என்பது வைணவக் கொள்கை. அயன், அரன், அரி ஆகிய மூவரும் ஒருவரே என்றும், அவ்வொருவரும் திருமாலே என்றும் பரிபாடல் கூறுகிறது. 'மூவுருவாகிய தலைபிரி ஒருவன்' என்பது பரிபாடல் தொடர். இதனையே விளக்கமாக்கி,

'' உலகம் யாவையும் தாமுள
வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட் டுடையா ரவர்
தலைவர், அன்னவர்க்கே சரண்
நாங்களே '

எனக் கம்பர் பாடுகிறார். உலகம் யாவற்றையும் படைத்துக் காத்து அழிக்கும் பரம்பொருளாகவே இங்கு திருமால் சுட்டப்படுகிறார்.

'' தானோர் உருவே தனிவித்தாய்த்
தன்னில் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றுமாய்
தானோர் பெருநீர் தன்னுள்ளே
தோற்றி அதனுள் கண்வளரும்
வானோர் பெருமான் மாமாயன்
வைகுந்தன் எம்பெரு மானே ''

என்ற நம்மாழ்வாரின் திருப்பாடலும் இக்கருத்தை மிக அழகாக விளக்கிக் காட்டுகிறது.

பரம்பொருளாகிய திருமாலை ஆன்மாவாகவும், உலகை அவரது உடலாகவும் கொள்வது வைணவ சம்பிரதாயம். ''அறிவுப் பொருள்கள், அறிவற்ற பொருள்கள் ஆகிய அனைத்தையும் தன் வடிவமாகக் கொண்ட பிரம்மம் ஒன்றே உண்மைப் பொருள்'' என்ற வேதக் கருத்தும் இதனை அரண் செய்கிறது. இக்கொள்கை, பிறர் ஏற்காத, வைணவ நெறிக்கே உரிய ஓர் உயிர்க் கொள்கை. எனவே இது 'பிரதானப் பிரதி தந்திரம்' எனப் போற்றப்படுகின்றது. ஆழ்வார்களும் 'உடல்மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளன்' என இக்கொள்கையைத் தம் அருளிச் செயல்களில் குறித்து வைத்துள்ளனர்.

அண்டங்களுக்கப்பால் பரந்திருந்தாலும் இறைவன் எல்லாப் பொருள்களிலும் கலந்திருப்பதை வைணவ நெறி மிக அழுத்தமாகப் பேசுகிறது. எல்லாப் பொருள்களையும் தன் உடலாகக் கொண்ட அவன், அவற்றைக் கடந்தும் உள்ளான். எல்லாப் பொருள்களுக்குள்ளும் கடந்தும் இருக்கும் இக்கடவுள் தன்மையை வைணவ உலகம் மிகச் சிறப்பாகப் போற்றிப் பணிகின்றது. ஐம்பூதங்களாகி, எண்திசைகளாகி, மறையாகி நிற்கின்ற மால், உள்ளத்திலும் இருக்கின்ற உண்மையை,

'' இறையாய், நிலனாகி, எண்திசையும்
தானாய்,
மறையாய், மறைப்பொருளாய்,
வானாய், பிறைவாய்ந்த
வெள்ளைத் தருவி விளங்கொலிநீர்
வேங்கடத்தான்
உள்ளத்தின் உள்ளே உளன்''

எனப் பேயாழ்வார் பாடுகிறார். இதே உண்மையை,

'' உளன்கண்டாய் நன்னெஞ்சே!
உத்தமன் என்றும்
உளன் கண்டாய், உள்ளுவார் உள்
ளத்து ஊளன்கண்டாய்;
வெள்ளத்தி னுள்ளானும் வேங்
கடத்து மேயானும்
உள்ளத்தில் உள்ளானென்று ஓர்''
எனப் பொய்கையாழ்வாரும்,

'' மனத்துள்ளான், வேங்கடத்தான்,
மாகடலான், மற்றும்
நினைப்பரிய நீள்அரங்கத் துள்ளான்''

எனப் பூதத்தாழ்வாரும் உணர்த்துகின்றனர். முதலாழ்வார்கள் மூவரும் உணர்த்தும் இந்த உண்மை ஏனைய வைணவ சாத்திரங்கள் அனைத்திலும் மிக விளக்கமாகப் பேசப்பட்டுள்ளது.

மூன்று உறுதிப் பொருள்கள் :

இம்மைக்கும் மறுமைக்கும் வழி காட்டும் எந்ததொரு சமயமும் எப்போதும் தத்துவம், நன்மை (ஹிதம்) பேறு (புருஷார்த்தம்) என்னும் மூன்றையும் தெளிவுறுத்தும் வகையிலேயே அமைந்திருக்கும். வைணவ



உபயநாச்சிமார்களுடன் உற்சவர்

நெறியும் இம்மூன்றையும் மிகத் தெளிவாக உணர்த்தும் முறையி லேயே அமைந்துள்ளது.

அடிப்படையில் வைணவம் மூன்று தத்துவங்களைக் கொண்டுள்ளது. இவற்றை உறுதிப் பொருள்கள் என் றும் சொல்லலாம். அவை சித்து, அசித்து, ஈசுவரன் எனப்படும். சித்து என்பது அறிவுள்ள உயிர்களைக் குறிக்கும். அசித்து, அறிவற்ற பொருள்களைக் குறிக்கும். மக்கள் பறவைகள் விலங்குகள் முதலியவற் றின் உடல்கள் முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான மூலப் பிரகிருதி இது. ஈசுவரன், பேரறிவாளனாகிய இறை வன். இவை மூன்றையும் தத்துவத் திரயம் (திரயம்=மூன்று) என்பர்.

சித்தாகிய ஆன்மாவைப் பற்றி வைணவ சமயம் மிக விளக்கமாகப் பேசியுள்ளது. மெய் வாய் கண் மூக்கு செவி எனப்படும் புற இந்திரி யங்கள், மனம் எனப்படும் உள் இயந்திரியம், பிராணன், அறிவு ஆகியவற்றோடு ஆன்மா வேறுபட் டுள்ளதாக அது தெளிவாகக் கூறு கிறது. சடப்பொருளாக இல்லா தது, அழிவில்லாதது, அணுவாக இருப்பது, அருவமானது, விகாரமில் லாதது, அறிவிற்கு இருப்பிடமாவது, ஆனந்த மயமானது இறைவனுக்கு அடிமையாவது முதலியவை ஆன்மா வின் இயல்புகளாகக் கூறப்பட்டுள் ளன. இவ்வகை இயல்புகளைக் கொண்ட ஆன்மா தூண்டத் தக்க தாகவும், தரிக்கத் தக்கதாகவும், உவப்பிக்கத் தக்கதாகவும் உள்ளது. இவ்வாறு தூண்டுகின்றவனாகவும், தரிப்பவனாகவும், உவக்கின்றவனாக வும் இருப்பவன் இறைவனே ஆவான். உவத்தலாவது, ஆன்மா செய்கின்ற தொண்டை ஏற்று உவத்தலாகும்.

இறைவனுக்கு அடிமைப்பட்டிருக் கும் ஆன்மாக்களை வைணர்கள் மூவகையாக்கிக் கூறுவர்; முதல் வகையினர் பக்தர். இவர்கள் பௌ திக உடலில் கட்டுண்ட ஜீவான்மாக் கள். நம்மைப் போன்றவர்கள். அடுத்த வகையினர் முக்தர். இவர் கள் பூதவுடல் நீங்கி அமரவுடல் பெற்றுப் பரமபதம் எனும் வீடுபேற் றினைப் பெற்றவர். அதாவது, உட லோடு கூடிய தொடர்பு முதலியவற் றால் உண்டாகும் குற்றங்களிலிருந்து நீங்கி, இறைவனடி சார்ந்து, இறை வனுக்கே ஆட்செய்பவர். இறுதி வகையினர் நித்தியர் எனப்படுவர். இவர்கள் இறைவனை விட்டு என்றும் பிரியாது, உடன் உறைந்து, குற்ற மொன்றும் இல்லாமல், இறையனு பவத்தில் திளைத்து, இறைவனுக்கே ஆட்செய்து, அவனை உகப்பிக்கும் இயல்பினர்.

அறிவற்ற பொருளைக் குறிக்கும் அசித்து, அறிவையும் ஆனந்தத்தை யும் கெடுப்பதோடு, ஆன்மாவிற்கு விபரீத ஞானத்தையும் கொடுக்கும். பழுதையைப் பாம்பாகப் பார்ப்பது போல ஒன்றை வேறொன்றாக எண்ணு தலே விபரீத ஞானம் எனப்படும். உடலை உயிராகவே எண்ணுவதும், இறைவனுக்குரிய ஆன்மாவைத் தனக் குரியதாகவே எண்ணுவதும் இதன் இயல்புகள். உலகமும் அதில் உள்ள உடல் முதலியவையும் அசித்துப் பொருள்கள். சுருங்கக் கூறினால், இறைவனுடைய திருவடியைச் சார ஆன்மா விட வேண்டிய அனைத்துப் பொருள்களையும் அசித்து எனக்கூறி விடலாம்.

வைணவ சித்தாந்தப் படி அசித்தும் நித்தியமானதே ஆகும். இறைவன் முத்தொழிலைச் செய்வதற்கு இவ் வுலகு அவனுக்கு உதவுகின்றது. எனவே இதனையும் நித்தியமானது என்பர். எனினும் இது மாறுதலுக்கு உட்பட்டது. பருவுடலாக (ஸ்தூல சரீரமாக) இருப்பது, நுண்ணுடலாக (சூட்சும சரீரமாக) மாறுவதை இங்கு நினைவு கூரலாம்.

இவ்வசித்து இருபத்து நான்கு வகையாக உள்ளது. பொறிகள் ஐந்து, புலன்கள் ஐந்து, கருமேந் திரியங்கள் ஐந்து, பூதங்கள் ஐந்து, பிரகிருதி ஒன்று மகத் தத்துவம் ஒன்று, அகங்கார தத்துவம் ஒன்று, உள் இந்திரியமான மனம் ஒன்று ஆகியவையே அவை. இவ்வாறு இருபத்து நான்கு வகையாக அசித்து கூறப்பட்டாலும், இவற்றுள் பிர கிருதியே முதற்பொருளாகும். ஆன் மாவின் இயல்புகளாகிய அறிவையும் ஆனந்தத்தையும் கெடுத்து, உடற் பற்று முதலிய குற்றங்களை இவை தோற்றுவிக்கும்.

பிரகிருதி, அவித்யை, மாயை என் பவை இதன் வேறு பெயர்கள்.

சித்தாகிய ஆன்மா விட வேண்டி யது அசித்தென்றால், பற்ற வேண்டி யது இறுதித் தத்துவமான ஈசுவரன். அசித்தை உடலாகக் கொண்ட உயிர் களைத் தனக்கு உடலாகக் கொண்டு அவற்றைத் தானிட்ட வழக்காய் இயக்கி வைப்பவன் இவ்வீசுவரனே ஆவான். எல்லோர்க்கும் ஆணையிடு பவன் எவனோ, எல்லாப் பொருள் களிலும் நிறைந்துள்ளவன் எவனோ, அவனே ஈசுவரன் எனச் சுருங்கக் கூறி விடலாம். அவன் திருமாலாகிய நாரா யணனே என்று கூறும் வைணவம்.

முப்பொருள்களில் ஒன்றாகக் கூறப் பட்டாலும், ஈசுவரனாகிய பரம் பொருள் முற்றறிவினது, பரிபூரண மானது. அறியாமை இன்ப துன் பங்கள் சித்துக்கு உண்டு. ஆனால் ஈசுவரனுக்கு இல்லை. அவ்வாறே பரிணாமம் என்னும் வேறுபாடு அசித் துக்கு உண்டு; ஆண்டவனுக்கு இல்லை. எல்லாக் காலத்தும் எல்லாவிடங் களிலும் இருக்கும் அவன், வேறொன் றின் துணையின்றித் தானே தோன் றும் ஆற்றலுடையவன். தள்ளத் தக்க பொருள் என எதுவும் அவ னிடம் இல்லை. அதே சமயத்தில் ஆன்மாவைப் பற்றியுள்ள தள்ளத் தக்கவற்றைப் போக்கி அருளுபவ னும் அவனே யாவான். இத்தகைய எல்லையற்ற இயல்புகளையுடைய ஆண் டவனை அநந்த கோடி கல்யாண குணங்கள் உடையவனாக வைணவம் போற்றுகிறது.

சித்து, அசித்து, ஈசுவரன் ஆகிய இவை மூன்றும் என்றும் அழிவில்லாத வேறு வேறு பொருள்கள். ஒவ்வொன்றும் தன்னளவில் தனித்தனி இயல்புடையவை. எனினும் எக்காலத்திலும் இவை மூன்றும் ஒன்றிணைந்தே உள்ளன. இம்மூன்றனுள் ஈசுவரன், சித்து, அசித்து ஆகிய இரண்டனுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான். இது இவற்றின் சூக்கும நிலை. பிரகிருதியாகிய மூலப்பகுதியே விரிவடைந்து மக்கள் பறவைகள் விலங்குகள் முதலியவற்றின் உடல்களாகவும், மற்றப் பொருள்களாகவும் ஆகின்றது. ஆன்மா தன்னுடைய பாவ புண்ணியங்களுக்கேற்ப ஒவ்வோருடம்பைப் பெறுவதே பிறப்பு எனப்படுகின்றது. பிரகிருதியின் விகாரமாகிய எல்லாப் பொருள்களிலும் எல்லா உயிர்களிலும் இறைவன் அந்தர்யாமியாக மறைந்துள்ளான். இது இவற்றின் ஸ்தூல நிலை ஆகும். பரம்பொருளாகிய இறைவன் இவ்வாறு ஒவ்வொரு பொருளினுள்ளும் அந்தர்யாமியாக மறைந்து நிற்கும் அதே நேரத்தில், அவை எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி எங்கும் வியாபித்தும் நிற்கிறான். இவ்விரு நிலைகளும் 'அந்தர்யாமித்துவம்' 'வியாபகத்துவம்' எனப்படுகின்றன.

'' அறிகிலேன் தன்னில் அனைத்துலகும் நிற்க
நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்''

எனத் திருவாய்மொழிப் பாசுரம் ஒன்று இதனை அழகாக விளக்குகின்றது. உடலில் உயிர் கரந்திருக்கும் தன்மைபோல், அவ்வுயிர் உட்பட எல்லாப் பொருள்களிலும் இறைவன் கரந்திருக்கும் தன்மை 'சரீர சரீரி பாவனை' என வைணவ மரபில் வருணிக்கப்படுகின்றது.

வைணவ சமயத்தின் தூண்களாக விளங்கும் இம்மூன்று தத்துவங்களும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல், அதே நேரத்தில் தத்தம் இயல்புகளையும் விடாமல், எல்லாக் காலங்களிலும் ஒன்று சேர்ந்தே காணப்படுகின்றன. இதனை விளக்கும் வகையிலேயே வைணவ சமயத் துறவிகள் மூன்று கோல்களை ஒன்றாகப் பிணைத்துத் தங்கள் கைகளில் ஏந்தியுள்ளனர்.

இம்மூன்று பொருள்களையும் சேதனம், அசேதனம், இறைவன் என்றும் குறிப்பதுண்டு.

(தொடரும்)

---

(22-ம் பக்கத் தொடர்ச்சி)

வெட்டுகள் உள்ளன. ராஷ்ட்ர கூட வம்ச அரசர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. காலம் கி. பி. 600-850. இது ஒரே கல்லில் குடையப்பட்ட குகைக்கோவில். நடுவில் வேள்வி செய்ய இடம் உள்ளது. இரண்டு அடுக்கு கொண்ட குகை. இங்கும் 8 தூண்கள் உள்ளன. மேல் தளத்தில் 7 வரிசை தூண்கள் உள்ளன. முன்புற தூண்களில் சிற்பங்கள் உள்ளன. கபால மாலை அணிந்த பைரவர் உருவம் உள்ளது. சிவன் லிங்கத்தை பிளந்து வந்து மார்க்கண்டேயனைக் காப்பாற்றிய காட்சி உள்ளது. விஷ்ணு ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டுள்ளார் - ஐந்து தலை நாகம். வாமன நரசிம்ம அவதாரங்கள் உள்ளன. தாரகாசுர வதம் உள்ளது. கைலாச குகையே இந்தியாவில் உள்ள மிகச் சிறப்பான குகை என்று கூறுவர். ராஷ்ட்ரகூட அரசன் முதலாம் கிருஷ்ண ராஜன் (கி. பி. 708-769). எல்லோராவிலுள்ள கைலாச நாதர் கோவிலைக் கட்டினான். இது காஞ்சியுள்ள கைலாசநாதர் கோவில் போலவே கட்டப்பட்டுள்ளது. இது ஒரு சிவன் கோவில். தந்தி துர்காவி என்ற ராஷ்ட்ர கூட அரசனும் (725-755கி.பி.) இக்கோவிலைக் கட்டியதாக பெர்கூஸன் கூறுகின்றார். பட்டடக்கல், பாதமி முதலிய இடங்களில் உள்ள சிற்பங்கள் போலவே இங்குள்ளவைகளும் காணப்படுகின்றன. இக்கோவிலைக்கட்ட 2 லக்ஷம் டன் கல் வெட்டப்பட்டதாம். மிகப் பெரிய நந்தி ஒன்று உள்ளது. கோவிலின் நீளம் 164 அடி அகலம் 109 அடி உயரம் 96 அடி. 3 பாகமாக உள்ளது முன் கூடம், அர்த்த மண்டபம், கர்ப்பக்கிரகம். இராமாயணச் சிற்பங்கள் காணப்படுகின்றன. சப்த மாதாக்கள், கணேசர் முதலியோர் உருவங்கள் உள்ளன. சிவன் கோவிலாக இருந்த போதிலும், விஷ்ணு சம்பந்தப்பட்ட சிற்பங்களும் உள

''இராமேஸ்வரம் குகை'' என்று 21வது குகைக்குப் பெயர். இது ஒரு சிவன் கோவில். 22வது குகைக்குப் பெயர் ''நீலகண்டர் குகை''. 25வது குகைக்குப் பெயர் ''கும்பர் வாடா குகை''. இதில் சூரியன் ஏழு குதிரை பூட்டப்பட்ட ரதத்தில் காணப்படுகிறான். 27வது குகையின் பெயர் 'கோபி குகை' 29வது குகைக்குப் பெயர் ''சீதா-கி-நஹானி'' இதன் பக்கலில் ஒரு நதி ஓடுகின்றது.

வட பாகத்தில் 5 ஜைன குகைகள் உள்ளன. இவற்றின் காலம் 8-13ம் நூற்றாண்டு. இதற்கு ''சோடா கைலாஷ்'' என்று பெயர் வழங்கப்படுகின்றது. 33-வது குகைக்குப் பெயர் ''இந்திர சபா''. ஜைனக் கோவில்களில் இதுவே முதன்மையானது; பழமையானது; இதில் பார்சவ நாதர், கௌதம சுவாமி, மஹா வீரர் இவர்களின் சிலைகள் உள்ளன. 34வது குகைக்குப் பெயர் ''ஜகன்னாத சபா''. இதில் உள்ள சிற்பங்கள் முழுமையாக உள்ளன. இதிலும் மஹாவீரர் பார்சவநாதர் சிலைகள் உள்ளன. இந்திர சபாவும் இந்த ஜகன்னாத சபாவும் உட்புறம் இணைக்கப்பட்டுள்ளன.

(எல்லோரா செல்லும் வழி பம்பாய் - மன்மாட் - ஔரங்காபாத். ஹைதராபாத்திலிருந்தும் செல்லலாம்.) ★

# மனம் தரும் தனம்

**மனம்-தனம் பொருள் விளக்கம் :**

மனம் என்னும் சொல் உள்ளம், நெஞ்சு, முன்னம், கருத்து, நினைவு என்னும் பல பொருள்படும். தனம் என்னும் சொல் பொருள், செல்வம், எண் வகைச் செல்வங்களில் ஒன்று என்று பொருள்படும்.

தனம் என்னும் சொல்லில் எழுத்துக்களை இடம் மாற்றி தமன் என அமைத்தால் அச்சொல் குபேரன் எனப் பொருள்படும். இதுபோல் மனம் என்னும் சொல்லில் எழுத்துக்களை மாற்றியமைத்தால் மமன் என்னும் சொல்லாகும். அதற்கு அதிர்ஷ்டமுடையவன், போகக்காரன் என்பது பொருளாகும்.

**வாழ்க்கையின் மையம் :**

ஒருவனுடைய மனத்திற்கு விருப்பமுடையனயாவும் இன்பமாகும்: வெறுப்புத் தருவனயாவும் துன்பமாகும்; எனவே ஒருவனின் இன்ப துன்பத்திற்கு மனமே அடிப்படை; மனிதன் என்னும் சொல்லே மனம் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது. வாழ்க்கையின் மையமே மனம் தான்.

திரு. மீ. சீனிவாசன், எம்.ஏ., பி.எட்.,
பரமக்குடி

ஒருவனுக்குத் தனம் வேண்டுமெனில் மனம் வேண்டும். நல்வினையால் நன்மனம் உண்டாகும். ஒருவனுடைய மனமே அவனை ஆட்டிப் படைக்கும் நிலையாய் உள்ளது. நினைவை உண்டாக்கி, முன்வினைக்குத் தகுந்தபடி சமநிலையில் நின்று உயர்த்தவும் தாழ்த்தவும் காரணமாவது மனமே; இம்மனத்தின் வழியே ஒருவன் தனத்தை அடையமுடியும் என்பதைத் திருவள்ளுவர்,

" எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின் "

என்பதால் விளக்குகிறார். மனம் போல் வாழ்வு என்னும் தொடரும் இக்கருத்தையே விளக்குகிறது.

**மனம் கொள்ளும் வடிவங்கள் :**

மனம்தான் எத்தனை வடிவெடுக்கிறது. கல்மனம், கடிமனம், சொல்மனம், கொடூரமனம், கோபமனம், கொலைமனம், கபடமனம், வஞ்சகமனம், வெகுளிமனம், முடமனம், சோம்பல் மனம், போலிமனம், திகைத்தல் மனம் என வடிவெடுத்து ஒருவனது செயலை வேறு வழிக்குத் திருப்பி விட்டு வேடிக்கை பார்க்கச் செய்து விடுகிறது. இதனால்தான் மூதாட்டி ஔவையும்,

" மனம் போக்கெல்லாம் போகவேண்டாம் "

என இடித்துச் சொல்கிறாள்.

**அடங்காமனம் :**

மனம் நம் கட்டுக்கு எளிதில் அடங்கி விடாது; நம்மை அலைக்கழிக்கும்; எனவே மனத்தை நாம் அடக்கியாளவேண்டும். அப்பர் சுவாமிகள் "திருவொற்றியூரிலுள்ள சிவபெருமானே! மனமாகிய சரக்கை ஏற்றிக்கொண்டு அறிவெனும் துடுப்பினால் தள்ளிக் கொண்டு பிறவிக் கடலில் செல்லும் போது ஆணவம் எனும் பாறையில் தாக்குண்டு கடலில் ஆழ்ந்து போகும் நேரத்தில் உன்னை நினைக்கும் உணர்வைத் தருவாயாக!" என்கிறார்

மனமெனும் தோணிபற்றி
மதியெனும் கோலையூன்றிச்
சினமெனும் சரக்கையேற்றி
செறிகடல் ஓடும்போது
மதனெனும் பாறைதாக்கி
மறியும்போது அறியவொண்ணாது
உனையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூருடையகோவே.

என்பது அவரது தேவாரம்.

**சூர்ப்பநகை தோல்விக்குக்காரணம**

ஆரணியத்தில் ஸ்ரீராமனைக்கண்டு அவன் வடிவழகில் தன்மனத்தை இழந்து அவனை அடைய ஆசைப்பட்டு, தன்னை அழகுடையவளாக உருமாற்றம் செய்து வருகிறாள் சூர்ப்பநகை; அப்போது அவள் கபடமனமுடையவளாகிறாள். தாபமனம் கொண்டு தன் சக்தியை இழந்து ஆற்றுளாகி,

" ஏழுறும் உயிர்க்கு நோவேன்
என்செய்வேன் யாருமில்லேன் "

என்று பிதற்றுகிறாள். இராமனிடம் முதலில் சொல்மனப்படும் போது இவள் புகழ்ச்சி மனம் கொண்டு,

" பூவிலோன் புதல்வன் மைந்தன்
புதல்வி; முப்புரங்கள் செற்ற
சேவலோன் துணைவனான
செங்கையோன் தங்கை; திக்கின்
மாவெலாம் தொலைந்து வெள்ளிமலை
எடுத்து உலக மூன்றும்
காவலோன் பின்னை; காமவல்லியாம்
கன்னி என்றாள் "

காமவல்லி எனத் தன் பெயரை அவள் மாற்றிக் கூறியது தன் செயல் மனத்தை காட்டுவதற்காகவே. அதாவது கற்பக மரத்தைச் சுற்றிருக்கும் காமவல்லிக் கொடிபோல உன்னை அணைத்திட வந்திருப்பவள் என்பதே அதன் கருத்து.

இப்படி புகழ்ச்சி மனம், தாபமனம், செயல்மனம் ஆகியவற்றிற்கிடையே நீதிமனமும் குறும்புமனமுமாக,

" ஆய்வுறு மனத்தளாகி அறந்தலை
நிற்பேன் "

என்றும் பேசி மன வழுக்கலுக்கு ஆளாகி அலைக்கழிக்கப்படுகிறாள் சீதையைக் கண்டு கோபமனமுமாகி

அவளுக்கு இன்னல் இழைக்க முற் படுகையில் இலக்குவனல் அவமானப் படுத்தப்பட்டு விரட்டப்படுகிருள்.

இவள் மனம் முதல், இடை, கடை என மூன்று நிலைகளிலும் ஒருமைப் பட இல்லையாதலால், தான் அடைய நினைத்த பொருளை அடையாததுடன் தன்மனமே தன்னை ஏமாற்றிவிட்ட நிலைக்கு ஆளாகிருள். இதனையே, "தன்வினை தன்னைச்சுடும்" என்னும் பழமொழி உணர்த்துகிறது.

**இராமன் வெற்றிக்குக் காரணம் :**

ஸ்ரீராமன் மனம் ஆழமுடைய சிந்தனைகளைக் கொண்டது, சிந்தனை வழியே செயல்படுவது, "பகைவனுக்கு அருள் செய்வாய் நன்னெஞ்சே" என்பதற்கிணங்க பகைவனுக்கும் அருள் செய்யும் தன்மை உடையது.

தனது பகைவனுகிய இராவணன் முதல் நாள் போரில் எல்லாவற்றையும் இழந்ததுடன் வீரமும் களத்தே போட்டு, வெறுங்கையுடன் நிற் கிருன். இதனைக் கம்பன்,

"ஆளையா வுனக்கு அமைந்தன
மாருதம் அறைந்த
பூளையா யின கண்டனை இன்று
போய்ப் போர்க்கு
நாளை வா வென நல்கினன்
நாகிளங்கமுகில்
வாளை தாவுறும் கோசல
நாடுடை வள்ளல்"

என்கிருன்.

இராவணனுடைய செல்வத்தில் தனக்குக் கொஞ்சம் கூடப் பற்றில்லை என்பதைப் புலப்படுத்தி அவனுக்காகப் பரிதாப மனம் கொண்டு, அவனை நோக்கி,

"உன்னுடைய சக்திகள் செல்வங்கள் வீணில் அழியலாமா! மனம் புத்திக்கு அப்பால் சித்தம் கலங்காது தீர்க்கமாக சிந்தனைச் செயலுக்கு வா! அதுவின்றி நான்கு எல்லைகளையும் கண்ட நீயா இப்படி நிற்பது! காமம் மிகக் கொடியது! அதை மற! ஊழால் மறதி மனப் பட்டு உறுதியில்லாது நீ இவ்வாறு ஆகிவிட்டாய்; இனியாவது நீ தனித்திருந்தும் பிறருடன் ஆலோசித்தும் செயலுக்கு வரவேண்டிய அவசியம் இருப்பதால், "இன்று போய் நாளை வா" என ஸ்ரீராமன் நல்கினன்."

தம் காரியத்தைத் தாமதப்படுத்தி சுயநலமின்றி எதிரிக்கும் விட்டுக் கொடுக்கும் கொடை மனம் பெற்ற கோசல நாடுடைய வள்ளலாகிய ஸ்ரீ இராமனின் மனோநிலையே அவன் வெற்றியின் சின்னமாகிறது.

**கர்ணன் பெற்ற முக்தி நிலை :**

கர்ணன் அர்ச்சுனன் அம்புகளால் வீழ்த்தப்பட்டுத் குற்றுயிரும் குலையுயிருமாகப் போர்க்களத்தில் கிடக்கிருன். அப்போது தன்னிடம் வேதியர் வடிவில் வந்த கண்ணனிடம் தான் செய் புண்ணியம் அனைத்தையும் ஈந்து விடுகிருன். தன்னிடம் வரம் வேண்டுமாறு கண்ணன் கர்ணனிடம் கூறும் போது அவன் நிதியையோ, பதவியையோ வேண்டாமல் "ஏழேழு பிறப்பும் இரப்போருக்கு இல்லையென்றுரையா இதயம் நீ அளித்தருள்" என வேண்டுகிருன்.

கர்ணன் வேண்டும் நேரமும், அவனது உடன் நிலையும் நோக்கும்போது உள்ளம் பண்பட்டு மனதைப் பக்குவ நிலையில் வைத்துக் கொண்டிருக்கிருன் என்பது தெளிவாகிறது.

ஆகவேதான் இறைவனும் அவனை இதயமலராலும் கைத்தல மலராலும் மார்புறத்தழுவிக்கண்மலரால் கருணை கூர்ந்து அக்கர்ணன் சுத்த மனமுடன் கருணை மனமும் ஈதல் மனமும் பெறுவதோடு அதற்கு வேண்டிய செல்வமும் படைத்து முடிவிலும் முக்தியும் அடைய வரமளித்ததுடன் தமது விஸ்வருபத்தையும் காட்டியருள்கிருர்.

"போற்றிய கண்ணன் கண்டு
கண்களிப்பப்
புண்ரி மொண்டெழுந்த கார்முகிலை
மாற்றிய வடிவம் பஞ்ச வாயுதமும்
வயங்கு கைத்தலங்களுமாகிக்
கூற்றுழற் கராவின்
வாயினின்றழைத்த
குஞ்சரராசன் முன் அன்று
தோற்றிய படியே தோற்றினன்
முடிவுந்
தோற்ற முமிலாத பைந்துளவோன்"

என்பது வில்லிபாரதம். கர்ணனிடம் நல்மனமும் தவமனமும் நீதி வழுவா மனமும் இருப்பதால் கடமை மனங்கொண்ட கண்ணனும் மனமுவந்து கனிவும் கொண்டு கிடைப்பதற்கரிய பெருவரங்கள் அருளினன்.

**முடிவுரை :**

இப்படியாக நாம் நோக்கும்போது ஒருவரின் மனமும் அவர்க்கு தனமாகிறது. நம் மனம் எங்ஙனம் அமைகிறதோ அவ்வாறே நம் வாழ்க்கை அமைகிறது. எனவேதான் அறத்திற்கு இலக்கணம் தந்த திருவள்ளுவர்,

"மனத்துக்கண் மாசிலன் ஆதல்;
அனைத்தறன்
ஆகுல நீர பிற"

என்று கூறி மனத்தூய்மையே நல்லறம் என விளக்குகிருர். தனத்திற்கு அடிப்படையான மனத்தை நல்வழிப் படுத்தி அதனை இறைவன் வீற்றிருக்கும் அருட்கோயிலாக அமைத்திடுவதே நமது கடமையாகும்!



# பிள்ளை உறங்கா வில்லியார்

ஸ்ரீ ராமானுஜர் பொதுவாக மனித சமூகத்திற்கும் முக்கியமாக வைஷ்ணவத்திற்கும் அநேக தொண்டுகள் புரிந்துள்ளார். சொல்லப் போனால் ஹரிஜன சமூகத்திற்கும், பின்தங்கியவர்கள் முன்னேற்றமடையவும் சுமார் 800 ஆண்டுகட்கு முன்பே வித்திட்டவர் ஸ்ரீ ராமானுஜர் என்றால் அது மிகையாகாது.

ராமானுஜர் மக்களை அவர்களுடைய பிறப்புகளைக் கொண்டோ, அவர்களது புத்தி சாதுர்யத்தைக் கொண்டோ பாகுபாடு செய்ததில்லை.


திரு. சி. ஆர். திருவேங்கடத்தான்
டால்மியாபுரம்


ராமானுஜர் ஜாதி பேதங்களைக் கடந்தவர். அவருடைய சிஷ்ய கோடிகளுள் எல்லாவித ஜாதியினரும் உண்டு. அவர் ஒரு உண்மையான ஞானி.

பகவானிடம் அத்யந்த ப்ரேமை, தீவிர பக்தி, உண்மையான அன்பு, பகவானிடம் பரிபூரணமாக சரணாகதி அடைதல் இவைதான் மானிடருக்கு நிஜமான ஆறுதல் அளிப்பவை. ராமானுஜருடைய சித்தாந்தமானது "ஜாதி பேதமின்றி எவனொருவன் பகவானிடம் சரணாகதி அடைகிறானோ அவனுக்கு நிச்சயமாக பகவானின் கருணா கடாட்சம் உண்டு" என்பதாகும்.

ராமானுஜரின் குருவான பெரிய நம்பி ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த மாறநேர் நம்பியை சீடனாக்கிக் கொண்டார். அதே விதமாகத்தான் ராமானுஜரும் ஜாதியில் வேடுவனாக இருந்த பிள்ளை உறங்கா வில்லியைத் தன் சிஷ்யனாக ஆட்கொண்டார்.

ஒருசமயம் உறையூரில் அரசாண்டு வந்த மன்னன் வேட்டையாடுவதற்காகக் காட்டிற்குச் சென்றான். அவன் காட்டில் வெகு தூரம் சென்று வேட்டையாடினான். மன்னன் களைப்புற்றிருந்த சமயம் ஒரு சிறுத்தை மன்னனின் மேல் பாய்ந்தது. இவ்வமயம் அங்கு வேட்டையாட வந்த பிள்ளை உறங்காவில்லி இதைக் கவனித்தான். கண் இமைக்கும் நேரத்தில் ஒரே அம்பினால் அச்சிறுத்தையைக் கொன்று மன்னனைக் காப்பாற்றினான்.

மன்னன் வில்லியை அருகே அழைத்து அவனை ஆலிங்கனம் செய்து கொண்டு கூறினான்: "நீ என்னுடைய உயிரைக் காப்பாற்றினாய். இன்று முதல் நீ என்னுடைய மெய்க்காப்பாளன். எப்படி இராமபிரான் குகனை தன்னுடைய ஐந்தாவது சகோதரனாக பாவித்தாரோ அவ்விதமே நாமிருவரும் சகோதரர்கள். நம்மை இனிமேல் ஒருவரும் பிரிக்க முடியாது".

தினமும் பிள்ளை உறங்காவில்லி உறையூருக்குச் சென்று மன்னனின் மெய்க்காப்பாளனாக ஊழியம் புரிந்து வந்தான். இந்த வில்லியின் ஜாதியிலேயே பிறந்து அவ்வூரிலேயே பொன்னியார் என்ற மிகவும் அழகான பெண் ஒருவள் இருந்தாள்.

மன்னன் இவ்விருவருக்கும் வெகு தடபுடலாகக் கல்யாணம் செய்து வைத்தான். ஒரு பெரியவீட்டையும் கொஞ்சம் நிலத்தையும் அவர்களுக்குச் சன்மானமாக அளித்து அவர்களை திருவெள்ளறை என்னும் க்ஷேத்திரத்தில் வசிக்கச் செய்தான்.

பிள்ளை உறங்கா வில்லி பொன்னியின் அழகில் வெகுவாக லயித்து அவளிடம் தன் உயிரையே வைத்தான். அவளை விட்டுப் பிரிந்திருக்க மனமில்லாமல் அவளையும் தன் கூடவே அரண்மனைக்கு அழைத்துச் சென்று வந்தான்.

தம்பதிகள் மிகவும் ஒற்றுமையுடன் இருந்து வந்தனர். தினமும் காவிரியைக் கடந்து உறையூர் அடைந்தனர். வெய்யில் காலத்தில் தன் மனைவி பொன்னியின் கால் சுடு மண்ணில் பட்டு வெகுவாக அவதியுற்றாள். இதைப் பார்த்து மனம் பொறுக்காமல் பிள்ளை உறங்கா வில்லி தன்னுடைய உத்தரீயத்தை கீழே விரித்து அதில் தன் மனைவியை நடந்துவரும்படி செய்தான்.

ஒரு சமயம் ராமானுஜர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினார். ஸ்ரீ ஸ்வாமிகள் தினந்தோறும் தம் சிஷ்யர்களுடன் காவிரிக்கரைக்கு எழுந்தருளி ஸ்னான, ஜபாதிகளை செய்து வந்தார். ஒருநாள் ராமானுஜர் இப்பிள்ளை உறங்காவில்லி தன் உத்தரீயத்தின் மேல் பொன்னியை நடக்கச் செய்வதைக் கண்டு விசனமுற்றார்.

தன்னுடைய சிஷ்யனை அழைத்து பிள்ளை உறங்கா வில்லியைத் தன்னிடம் அழைத்து வருமாறு கூறினார். வில்லியிடம் "ஏன் இப்படி உன் மனைவியை உத்தரீயத்தின் மேல் நடக்கச் செய்கிறாய்?" என்று கேட்டார்.

அதற்கு வில்லி, 'ஸ்வாமிகளே நான் என் உயிரையே என் அழகான மனைவியிடம் வைத்திருக்கிறேன். அவளுடைய அழகில் மயங்கி அவளை விட்டுப் பிரிய மனமில்லாமல் தினமும் என்னுடன் அழைத்துப் போகிறேன். அவள் மண்ணின் சூட்டை பொறுப்பதில்லை. அதனால் தான் என் மேல் துண்டை கீழே போட்டு அதில் நடக்க வைக்கிறேன்" என்றான்.

ராமானுஜர் இதைக் கேட்டுத் துக்கித்தார். பிறகு வில்லியைப் பார்த்து "அன்பரே இந்த அழகெல்லாம் அநித்யமானது. சாஸ்வத

மல்ல, அழியும் தன்மையுடையது. இதெல்லாவற்றையும் விட சிறந்ததும் சாஸ்வதமானதும் அழியாததுமான அழகு பிம்பம் ஒன்று உள்ளது. அதை நீர் கண்டு விட்டால் பிறகு அழியக் கூடிய இந்த அழகின் மேல் நாட்டம் கொள்ள மாட்டீர். அது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். இகபர சுகத்துற்கு உகந்தது'' என்றார்.

வில்லியாரும் "ஸ்வாமிகளே, அப்படியொரு நிரந்தர அழகு பிம்பம் இருக்குமேயானால் அதை எனக்கு காண்பியுங்கள். நான் மிகவும் கடமைப்பட்டுள்ளவன் ஆவேன்'' என்றார்.

ராமானுஜர் தமது சிஷ்யர்களை அழைத்து பிள்ளை உறங்கா வில்லியாரை திருவரங்கத்திற்கு அழைத்துச்சென்று அரங்கநாதரையும் ரெங்கநாயகித்தாயாரையும் ஸேவை செய்து வைக்கும்படிகூறினார். வில்லி தன்னுடைய மனைவியுடன் ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள ஸ்ரீரங்கநாதரையும், ரங்கநாயகித் தாயாரையும் ஸேவித்தார்கள். திவ்ய தம்பதிகளின் ரூபாலாவண்யத்தில் மயங்கினார். தினமும் வில்லியும் அவன் மனைவியும் ஸ்ரீரங்கநாதரைஸேவிக்கத் தவறுவதில்லை.

வில்லியார் ராமானுஜருடைய சீடரானார். ஸ்ரீராமானுஜரின் உபதேசங்களைப் பெற்று தன்னுடைய ஆசாபாசங்களை வென்றார். இவ்வாறு ஜாதி, மத பாகுபாடின்றி மக்களை ஆன்மீக வழியில் ஈடுபடுத்தி அவர்கள் உய்விக்கும் வழியையும் செய்தார்.

திருவெள்ளறை என்ற திவ்யக்ஷேத்திரம் திருச்சி-மண்ணச்சநல்லூர் பஸ் மார்க்கத்தில் சுமார் 9 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்கு எழுந்தருளியிருக்கும் பெருமானின் திவ்ய நாமம் புண்டரீகாக்ஷன்.

யமதர்பாரில் ஒவ்வொரு வைஷ்ணவனையும் கேட்கும் முதல் கேள்வி "வெள்ளறையைக் கண்டாயா?'' என்பதாம். அப்படி புண்டரீகாக்ஷனை தரிசித்தவர்களுக்கு ஸ்வர்க்க யோகம் நிச்சயமாக உண்டு என்று ஒரு ஐதிகம் உலவி வருகிறது.



## மனமே நீ யெழாய்

கங்குலுஞ் சென்றொழிய கீழ்வான் வெளுத்ததுவே!
செங்கண்மால் சீர்பரவ மாமறையார்—சங்கத்தே
தூபங் கமழத் துதிக்கின்றார்! நீ யெழாய்,
பாபப் பிறப்பிற் பிழைத்து. (1)

பிழையிற் குயிலின மார்க்கப் புலர்வே!
மழைக்கண் மதுசூதன் பாதம்—இளையரும்
தம்சென்னி தாழ்த்தப் பொருதருவார்! நீ யெழாய்
வஞ்சத் துயில்விடுத்து நேர்! (2)

நேற்றின் இனிதாய் நினைக்கப் புலர்ந்ததுகாண்!
சாற்றப் பறைகிரங்க, மாலவற்கு—சாற்றுமுறை
தாம்வழுவா தேத்துகின்றார்! தேற்றத்தாய்! நீயெழாய்
கூம்புங் கடிமனங் காத்து. (3)

கடிமனங் காத்த கருத்தாய் குணக்கும்
விடிய, திருவேங்கடத்துப்—படிமம்
துலங்கநீ ராட்டுகின்றார்! தூக்கந் திருத்தி
நலங்கொள நீயெழா யிங்கு. (4)

இங்கெழுந்த மாமாயம் போய விடியல்காண்!
சங்கேந்தும் கையற்குச் சாத்துகின்றார் — பொங்க,
நறுஞ்சாந்தம்! மையல் நலியத் துயிலெழாய்!
வறுமன மேத்த விழைந்து. (5)

விழைந்தாயர் மேய்புலம் நோக்க விடியே!
மழைக்கண் திருமாற்குப் பொன்னின்—இழைமடி
செம்மரை யேத்துகின்றார்! சொல்லன்முன் நீ யெழாய்
எம்மா முதல்வற் குகந்து. (6)

துறந்தார் துதிக்கத் தெளிவுறு ஞாலம்
புற்நெறி தாங்கிப் புலர்ப்ப!—அறவாழி
கையாற்குப் பொன்னணி கைக்கொண்டார்! நீயெழாய்!
நையா மனத்து நினைந்து (7)

நினையப் பரஞ்சேர்க்கும் வைகறை நாளாம்!
கனைனீ ரரங்கற்குக் கள்ளார்—புனை தொடையல்
சாத்துகின்றார் செம்மனத்தால்! செல்லக் கடிதெழாய்!
பூத்த பெருமனம் போர்ந்து (8)

பேரிருளுந் தூரப் புலர்ந்ததுகாண்! வையகத்தே,
பாரிட முண்ட பெருமாற்குப்—பாரிப்பார்
நெய்கமழ் தீபத்தா லடியார்! துயிலெழாய்!
செய்ய திருமனத்திற் சார்ந்து. (9)

சார்ந்தவெஞ் சூரிருள் சோரப் புலர்ந்ததுவே!
கார்தூங்கும் ஏழ்மலை வேங்கடவன்—கூர்நுதற்கு
ஒண்ணுமம் ஏததுகின்றார்! ஒண்மணியே நீயெழாய்!
எண்ணுயிருள்மனத்தா யங்கு. (10)

திரு. தி. நவநீதகிருஷ்ணன்,
போடிநாயக்கனூர்

# திருமலையும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறியும்

இப்பெரிய ஜீயர் ஸ்வாமிக்கு அத்யாபகத் தலைமைச் செல்வத்தோடு தர்மகர்த்ருத்வம், சுமந்து மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு செய்யும் அத்தாணிச் சேவகம் என்ற வேறிரண்டு செல்வங்களுமுண்டு. இவற்றுக்கெல்லாம் சம்மானமாக வேங்கடக்கோன் தானுமிழும் பொன்வட்டிலிலிருந்து கோஷ்டியில் முதல்தீர்த்த மரியாதையும் மற்ற பகுமானங்களும் ப்ரஸாத பணியாரப்பங்கும் பெற்று அனுபவித்து வருகிறார் இவர். இவையனைத்தும் எம்பெருமானார்க்கு இருந்தபடியினால் அவருடைய பரம்பரையில் வந்த இந்தப்பெரிய ஜீயர் ஸ்வாமிக்குப் பைத்ருகதனம் போல் அனுபவத்திலிருந்து வருகிறது. இத்தகைய மூன்று பெருமைகளும்பெற்ற ஜீயர் ஸ்வாமி இவரொருவரே. வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

இனித் தீர்த்த க்ரமம்

1. பெரிய ஜீயர் ஸ்வாமி
2. சிறிய ஜீயர் ஸ்வாமி
3. ஏகாங்கி
4. தோழப்பாசாரியர்
5. அனந்தாண்பிள்ளையார்
6. கந்தாடையார்
7. ப்ரதிவாதி பயங்கரத்தார்
8. வீரவல்லியார்
9. தர்மபுரியார்
10. பரவஸ்து பட்டர்பிரான் ஜீயரைச் சேர்ந்தவர்கள்.

திருமலை திருப்பதி திருச்சானூர்களில் இதுவே தீர்த்தக்ரமம்.

இதுவரையில் திருமலை திருப்பதி திருச்சானூர்க் கோவில்களில் நடைபெறும் திருநாள்கள் திவ்ய ப்ரபந்தானுஸந்தானம் முதலியன விண்ணப்பிக்கப் பெற்றன. இனி அவற்றை நிறம் பெறுவிக்கும் பூர்வாசார்யர்களின் ஸம்பந்தம் விண்ணப்பிக்கப் பெறும்.

திருவேங்கடமுடையானுக்கு ஸ்ரீ தொண்டரடிப் பொடியாழ்வார் தவிர மற்ற எல்லா ஆழ்வார்களுடைய மங்களாசாஸனமும் உண்டென்பது ப்ரஸித்தம். அவர்களுக்குள் ப்ரதானரான நம்மாழ்வார் த்வய மந்த்ரார்த்தமான உபாயவரணத்தையும் உபேய ப்ரார்த்தனையையும் முறையே உலகமுண்ட பெருவாயா ஒழிவில் காலம் என்றஇரண்டு பதிகங்கள் வாயிலாக இப்பெருமான் திறத்திலேயே செய்திருக்கிறாரென்பதும் அனைவரும் அறிந்ததேயாகும். இங்ஙனம் ஆழ்வார்களில் முக்கியமானவரும் ப்ரபந்நஜந கூடஸ்தருமான (=ப்ரபத்தி நிஷ்டர்களான ஆசார்யர்களுக்கு மூல புருஷருமான) நம்மாழ்வாருடைய ஸம்பந்தமே அவர் பரம்பரையில் வந்த பூர்வாசார்யர்கள் இத்தலத்தின்கண் மிக்க பற்றுடையவர்களாக இருந்தமைக்குக் காரணமாகும்.

ஆளவந்தார்

திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு முன்பு இடது பக்கத்தில் ஆளவந்தார் சிறு குடிலொன்றை அமைத்துக் கொண்டு அதில் புஷ்பங்களை மாலையாகத் தொடுத்துப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து வந்தார் என்று ஸ்ரீவேங்கடாசல லேதிஹாஸ மாலை தெரிவிக்கின்றது.

திருமலை நம்பி

எம்பெருமானாருக்கு மாதுலரான பெரிய திருமலைநம்பி ஸ்வாசார்யரான ஆளவந்தார்ஸந்நிதியில் திருவாய்மொழி கேட்கும் போது ஒழிவில்காலப் பதிகம் வந்தவாறே 'சுமந்து மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு' என்ற பகுதியை விவரித்துக் கொண்டிருக்கிற ஆளவந்தாருடைய கட்டளையின்படி திருமலைக்கெழுந்தருளிப் பாபவிநாச தீர்த்தத்திலிருந்து திருமஞ்சனங் கொண்டு வந்து தினந்தோறும் ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தார். இவரது கைங்கர்ய ச்ரத்தையை உலகோர் அறியும்படியாகச் செய்ய வேணுமென்றெண்ணிய திருவேங்கடமுடையான் ஒருநாள் நடுவழியில் வேடனாய்த் தோன்றி, தாத்தா தாகம் மிக்கிருக்கிறது. தீர்த்தம் தாருமென்று கேட்டான். அட வேடா, பெருமாளுக்காகத் தீர்த்த மெடுத்துச் செல்கிறேன். இது மனுஷ்யார்ஹமன்று என்று மறுத்துக் கூறிவிட்டுப் பெரிய திருமொழியநுஸந்தானத்தில் ஆழ்ந்து மகிழ்ச்சியோடு நம்பி தீர்த்தக் குடமெடுத்துச் செல்லா நிற்க, அவரைப் பின் தொடர்ந்த வேடன் அவருக்குத் தெரியாதபடி மிக லாகவமாக வில்லில் அம்புதொடுத்து எய்து குடத்தின் வயிற்றில் துளைத்து அதிலிருந்து மிகச் சிறிய தாரையாக வரும் நீரையெல்லாம் குடித்துக் கொண்டே செல்கிறான். பெரிய திருமொழியினால் பகவத் குணங்களை ஆழ்ந்து அனுபவிக்கும் நம்பி வேடன் செய்ததைச் சிறிதுமறியாதிருந்தவர் சிறிது தூரம் சென்ற பிறகு நீர் பெருகிப் போவதனால் மெல்லமெல்ல இலேசாய்ப் போன குடத்தைப் பார்த்து இது என் என்று திருமுகத்தைத் திருப்பி, நீர்த் தாரையைக் குடித்துக்கொண்டிருக்கும் வேடனைக் கண்டு, அடே வேடா பாக்கியமற்றவனே, பெருமாள் தீர்த்தத்தில் துரோகம் செய்தாயே என்று அவனை நிந்தித்தார். தாத்தா கவலைப் படாதீர், ஸமீபத்தில் உமக்குத் தீர்த்தம்

பாரத்துவாசன்

காட்டுகிறேன்? அதிலிருந்து பெருமாளுக்குத் தீர்த்தமெடுத்துச்செல்லுமென்று கூறி அவரையழைத்துச் சென்று ஆகாச கங்கா தீர்த்தத்தில் விட்டு, அங்கு நீர் தென்படாமையால் அம்பினால் ஒரு குண்டுக் கல்லைத் துளைத்து அதிலிருந்து நீர்த்தாரையை உண்டாக்கி, தாதா இந்த ஆகாச கங்கை பெருமாளுக்கு மிகப் பிரியமானது, இன்று முதல் இதிலிருந்தே எனக்குத் தீர்த்தம் கொண்டு வாரும் என்று கூறி, தானே திருவேங்கடமுடையான் என்பதைக் காட்டி மறைந்தான் அவ்வேடன். அவ்வியப்பைக் கண்ட திருமலைநம்பி ஆச்ரிதரிடத்தில் வேங்கடவனின் விளையாட்டுச் சுவை தான் என்னே என்று நினைத்து ஆச்சரியமடைந்தவராய் அக்குடத்தைச் சரிப்படுத்தித் தீர்த்தம் நிரப்பி வந்து பெருமாள் திருமுன்பே வைத்தார். திருவேங்கடமுடையான் அர்ச்சகரை ஆவேசித்து வாரீர் ஸ்ரீசைலபூர்ணரே, நீர் கொண்டுவந்த சுசியும் ருசியுமுள்ள தீர்த்தத்தாலே நடு வழியில் என் தாகம் தீர்ந்தது என்று கூறி அவரை மகிழ்வித்து, அவருடைய திருமஞ்சன கைங்கர்யம் தானுகந்ததென்பதை உலகிற்குக் காட்டியருளினான். இதைக் கண்ட நம்பி தம்மைப் பரம பாக்யசாலியாக எண்ணி அது முதல் அக்கைங்கர்யத்தில் அளவற்ற ஆசையுடையவராய் ஆகாச கங்கையிலிருந்தே தினந்தோறும் திருமஞ்சனம் கொண்டுவந்து ஸமர்ப்பித்துப் பெருமாளை மகிழ்வித்துக் கொண்டெழுந்தருளியிருந்தார். (தாதா என்று இவரைப் பெருமாள் அழைத்தபடியால் இவருடைய ஸந்ததியார் தாதாசார்ய வம்சத்தவர் எனப்பட்டார்கள்.) இவ்வாசார்யர் பெருமானே தர்சன ஸ்தாபகரான எம்பெருமானாருக்குத் திருமலையிலிருந்து தினந்தோறும் இறங்கி வந்து அடிவாரத்தில் ஸ்ரீராமாயண ரஹஸ்யார்த்தங்களை ஒரு வருஷ காலம் உபதேசித்தவர்.

**ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர்**

எம்பெருமானார்க்குத் திவ்யப்ரபந்தம் ஸ்தோத்ரம் பெரியோர்கள் அருளிச் செய்த நல்வார்த்தைகள் இவற்றை உபதேசித்தவராய் ஆளவந்தாருடைய சிஷ்யரான ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் ஒரு கால் ஸ்ரீரங்கத்தில் திருக்கார்த்திகை மஹோத்ஸவத்தில் பெரிய பெருமாளைத் திருவடி தொழுது எம்பெருமானாருடைய அனுமதி பெற்றுத் திருவேங்கடமலைக்கு எழுந்தருளித் திருமலைநம்பி அனந்தாழ்வான் ஆகியவர்களால் எதிர்கொண்டழைக்கப் பெற்று அவர்கள் புருஷகாரமாகச் சென்று திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுதார். திருமலையப்பன் அவருக்குத் தீர்த்த ப்ரஸாதாதி வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்து 'வாரீர் அரையரே, நீர் நம் உடையவருக்குத் திருவாய்மொழியாசார்யராகையாலே நமக்கு மிகவும் உகந்த விஷயமாயிருக்கிறீர், ஆகையால் செந்தமிழாலே முந்துற முன்னம் நம்மைக் கவிபாடுகையாலே நமக்கு இனிய விஷயமான முதலாழ்வார்கள் கவியிலே ஒருபாட்டைப் பாடும்' என்றருளிச் செய்ய, அரையர் முதல் மூன்று திருவந்தாதிகளில் முதற் பாட்டு முடிவுப் பாட்டுக்களையும் மனத்துள்ளான் வேங்கடத்தான் நெறியார்குழற்கற்றை என்னும் இரண்டு பாட்டுக்களையும் தேவகானத்தில் பாடத் திருவேங்கடமுடையான் மிகவுமுகந்து மறுபடியும் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் முதலான வரிசைகளையெல்லாம் ப்ரஸாதித்தான். இதைக் கண்டுகொண்டிருந்த நம்பியும் அனந்தாழ்வானும் அரையரைப் பார்த்து 'தேவரீர் நாளை முதலாக அத்யயனோத்ஸவத்தில் ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களைத் திருவேங்கடமுடையான் திருச்செவி சாத்தியருளும்படி தேவகானத்தில் ஏறிட்டுப் பாடியருளவேணும்' என்று ப்ரார்த்திக்க, அரையர் இது திருவேங்கடமுடையானுடைய நியமனம் என்று மறுநாள் தொடங்கி எல்லாவற்றையும் பாடிப் பெருமாளை உகப்பித்துத் திருநாள் முடிந்தவாறே பெருமாளிடமும் நம்பி அனந்தாழ்வான் அர்ச்சகர் முதலியோரிடமும் அனுமதிபெற்று ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளி, உடையவர் ஸத்கரிக்க, அவரிடம், தேவரீருக்குத் திருவாய்மொழி ஓதுவித்தேனென்று அடியேனைத் திருவேங்கடமுடையான் ஆதரித்த விஷயத்தை அடியேனால் சொல்லி முடியாது என்று கூறி, திருமலைநம்பி அனந்தாழ்வான் நியமித்ததையும் அதைத்தாம் அநுசரித்ததையும் விவரமாக அருளிச் செய்தார். (திருமலையொழுகு)

இன்னொரு சமயம் இந்த அரையர் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்தருளும் போது பூர்வ வாஸனையாலே கங்குலும் பகலும் என்ற பத்துப் பாட்டையும் தேவகானத்திலேறிட்டுப் பாடாநிற்க, பெருமாளுகந்து வாரீர் அரையரே, ஆழ்வார் நம்பக்கல் மோஹித்து நாயிகா தசையை அடைந்து நம்மையநுபவித்த ப்ரகாரத்தை அநுகரித்துக் காட்டினீர். இது நமக்கு மிகவும் இனிதாக இருந்தது. கலியன் நாயிகா தசாபந்நராய் நம்மையனுபவித்த சொல்லிலே ஒன்றைச் சொல்லீர் என்ன, அரையர் கலியன் மடலூர்ந்து பகவதநுபவம் பண்ணின சிறிய திருமடலைப் பரவசராய் ஈடுபட்டருளிச செய்யக் கேட்ட திருவேங்கடமுடையான் அரையருக்கு வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருளினான். (திருமலையொழுகு)

**எம்பெருமானார்**

திருமலையிலும் திருப்பதியிலும் ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் செய்தருளிய அமாநுஷ க்ருத்யங்கள் கணக்கிலடங்கா. திருமலையொழுகு இதிஹாஸமாலை முதலிய சரித்திர நூல்களில் அவற்றையெல்லாம் காண்க. முக்கியமென்று கருதிய சில சரித்தி

ரங்கள் மட்டும் இங்கு விண்ணப்பிக்கப்படுகின்றன.

இக்கலியுகாதியில் திருவேங்கடமுடையான் தன் பரம பக்தனுகிய தொண்டைமான் சக்ரவர்த்திக்குச் சத்ருஸம்ஹாரார்த்தமாகத் திருவாழி திருச்சங்குகளைத் தாம் கொடுத்தருளிய பெருமையை உலகோர்க்கு அறிவித்தற் பொருட்டுத் திருக்கைகளில் திருவாழி திருச்சங்குகளில்லாமல் ஸேவை ஸாதிப்பதைக் கண்ட காளஹஸ்திச் சைவர் சிலர், யாதவ ராஜன் திருமலையப்பனுக்குத் திருவாராதனம் செய்யும் ஸ்ரீவைகாநஸார்ச்சகர்களிடம் ஏதோ காரணமாகச் சிறிது கோபமுற்றிருந்த ஒரு சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு, திருமலையப்பனைப்பற்றி இவன் கந்தனென்றும் சிவனென்றும் ஹரிஹர மூர்த்தியென்றும் தம் மனம் போன படியெல்லாம் அரசனிடம் கூறி இத் திவ்ய தேசத்தை ஸ்வாதீனப்படுத்திக் கொள்ள முயன்றபோது, திருமலையிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களால் அழைக்கப் பெற்ற எம்பெருமானுர் ஸ்ரீரங்கத்திலிருந்து எழுந்தருளி அரசனது சபையில் சைவர்களுடன் வாதம் புரிந்து ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராண திவ்ய ப்ரபந்தாதி ப்ரமாணங்களை உபந்யஸித்துத் திருவேங்கடமுடையான் ஸ்ரீ மஹா விஷ்ணுவே என்று நிலை நாட்டியருளிய தோடல்லாமல், இனி யாருக்கும் எவ்வித ஸந்தேகமும் உண்டாகாத படி ஸ்வர்ணத்தில் சங்கு சக்கரங்களை நிருமாணம் செய்வித்துப் பெருமாளது அநுமதி பெற்று அவற்றை அவர் திருக்கைகளில் சாத்தினர். இதனுல் யாதவராஜன் மகிழ்ந்து எம்பெருமானுர்க்குச் சிஷ்யனுஞன். சைவர்களை தேச ப்ரஷ்டர்களாக்கினுன்.

இது அவர் செய்தருளிய கார்யங்களில் சிகரமானதாகும். மேலும் கேண்மின்.

திருவேங்கடமுடையான் திருமார்பில் (சிலை யுருவத்திலேயே) அகலகில்லேனிற்படியே பிராட்டி எழுந்தருளியிருக்கச் செய்தே, ஸந்நிதியில் திவ்யைச்வர்யம் உண்டாகும்படிக்கு ஸ்வர்ணத்தினுல் த்விபுஜையான திருமார்பு நாச்சியாரை ஏறியருளப் பண்ணிப் பெருமாள் திருமார்பில் சாத்துவித்தார். நாஸிகா மூலம் தொடங்கிக் கேசாந்தமாகப் பெருமாளுக்குத் திருயண் காப்பு அணிவித்தார். செங்கனிவாயன் திருவம்சத்தில் பிறந்த பரம பாகவதர்களான ஸ்ரீ வைகாநஸர்களின் திருக்கைகளாலேயே முன்பு போல் திருவாராதனம் கண்டருளும்படி கட்டளையிட்டார். மார்கழி மாதத்தில் க்ருஷ்ணனை சயன பேரமாக இருக்கும்படி நியமித்தார். பெருமாளுடைய திவ்ய விமானத்தில் ஸ்ரீவைகாநஸ சாஸ்திரத்திற் கூறியபடியே நான்கு பக்கங்களிலும் வராஹ நாரஸிம்ஹ வைகுண்டநாத ஸ்ரீ வேங்கடேசர்களை ஏறியருளப் பண்ணுவித்தார். திவ்ய நகராபி விருத்துக்காகவும் ஸந்நிதியில் திவ்யைச்வர்யம் உத்தரோத்தரம் அபிவிருத்தமாம் படிக்கும், கௌதுகபேரமான மலை குனிய நின்ற பெருமாளை உத்ஸவ மூர்த்தியாகவும் உத்ஸவபேரமான வேங்கடத்துறைவாரைக் கௌதுக பேரமாகவும் மாற்றியமைத்தார். திருவேங்கடமுடையானுக்கு முன்னமே வராகப் பெருமாள் திருவாராதனமாகி அமுது செய்தருளும்படி நியமித்தார். சிவபெருமானுக்கு ஸேவை ஸாதிப்பதற்காகத் தோன்றியதாக ப்ரஹ்மாண்டாதி புராணங்களில் சொல்லப்பட்ட அழகிய சிங்கரி பக்கத்திலே அவருடைய பக்தனை எங்கள் சிவபிரானையும் ப்ரதிஷ்டை செய்து கொள்ளுகிறேமென்று ஒரு கால் சைவர்கள் சண்டையிட, வைஷ்ணவர்கள் அரசன் மூலமாக அதைத் தடுத்து நிறுத்தி, கலஹத்துக்குக் காரணமான இந்த அழகிய சிங்கருக்குத் திருவாராதனம் வேண்டாமென்று நிறுத்தி விட்டதாகக் கேள்விப்பட்ட எம்பெருமானுர், இனிக்கலஹத்திற்கு இடமில்லாதபடி திருமலை விஷ்ணு ஸ்தலமென்று ஸ்தாபிக்கப்பட்டு விட்டபடியினுல், அழகிய சிங்கருக்குத் திருவாராதன லோபம் உண்டானுல் ஸ்தலத்துக்கு அநிஷ்டமென்று நினைத்தருளி அவரைத் திருவேங்கடமுடையானுக்கு எதிரே ப்ரதிஷ்டை செய்வித்துத் திருவாராதனமும் நடக்கும்படி நியமித்தார். சோழவரசனது உபத்திரவத்தினுல் திருச்சித்ரகூடத்திலிருந்து உபய நாச்சியாருடன் எழுந்தருளிய தேவாதி தேவனென்னும் கோவிந்த ராஜவுத்ஸவ மூர்த்தியை ஒரு மூலவரையேறியருளப் பண்ணி அவருடன் கீழ்த் திருப்பதியில் ப்ரதிஷ்டை செய்வித்தார். அவருடைய இடது பக்கத்தில் ஆண்டாளையும் ப்ரதிஷ்டை செய்வித்தார். திருமலை நம்பியை வழியில் தடுத்து அவர் கொண்டு செல்லும் திருமஞ்சன தீர்த்தத்தைத் திருவேங்கடமுடையான் அமுது செய்தருளிய ஐதிஹ்யத்தை அது நடைபெற்ற—அத்யயனேத்ஸவம் முடிந்த மறுநாளிலேயே, திருமலை நம்பி வம்சத்தில் பிறந்த ஸ்ரீ வைஷ்ணவர் பாபநாசத்திலிருந்து தீர்த்தம் கொண்டு வரும்போது திருமலையப்பனை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு சென்று, அவர் அத்தீர்த்தத்தைப் பானம் செய்தருளும் பாவனையில் ஒருத்ஸவமாக நடத்தி வைத்தார். அனந்தாழ்வான் தமது தோட்டத்தில் புஷ்பம் களவு போவதைக் கண்டு பிடிக்க வேணுமென்று இரவில் தூங்காமல் தோட்டத்தில் சுற்றி வர, பெருமாளும் பிராட்டியுமாக ராஜ தம்பதிகள் வேஷத்தில் எழுந்தருளி ஒருவருக்கும் தெரியாமல் புஷ்பங்களைக் கொய்து செல்ல, ஓரு நாள் அவருக்குக் கையும் களவுமாகப் பிடிபட்ட திவ்ய தம்பதிகளில் பெருமாள் மட்டும் தப்புவித்துக் கொண்டு ஓடி அப்ரதக்ஷிணமாகக் கோயிலுக்குள்ளே புகுந்தாரென்றும், பிராட்டி பிடிபட்டு அனந்தாழ்வானுல் செண்பக மரத்தில் கட்டுண்டு, 'என்னிடம் தவறேதுமில்லை, என் கணவன் தான் புஷ்பத்தைக் களவு கண்டவன், தயை

செய்து என்னைவிட்டு விடுவீராகுல் உமக்கு நான் பெண்ணுக ஆவேன்' என்று கூறிக் கொண்டிருக்க, அப்போது பொழுது விடிந்து அர்ச்சகர் முதலியோர் திருமார்பில் நாச்சியாரைக் காணுமல் வருந்தி நிற்க, பெருமாள் ஒருவனை ஆவேசித்து நடந்ததைச் சொல்லிப் பிராட்டியையும் அனந்தாழ்வானையும் அழைத்து வரும்படி கட்டளையிட, பரிஜனங்கள் தோட்டத்திற்கு வந்து விண்ணப்பிக்க, மணத்திற்குரிய பருவத்திலிருக்கும் கந்யையாக ஸேவை ஸாதிக்கிற பிராட்டியைக் கட்டவிழ்த்துப் பொறை வேண்டி, அவள் கூறிய படியே தன் பெண்ணுக அவளையெண்ணி இடுப்பில் எடுத்துக் கொண்டு சென்று, பெருமாளை க்ஷமிக்கும்படி ப்ரார்த்தித்து அப்பிராட்டியைப் பெருமாளிடம் ஸமர்ப்பிக்க, அவள் சிலம்பார்க்கச் சென்று திருமார்பில் ஸ்வர்ண மயமான கண்டிகையில் சேர்ந்து முன் போல் விளங்கிஞள் என்னும் சரிதத்தைக் கேட்ட எம்பெருமாஞர் ப்ரஹ்மோத்ஸவத்தின் ஏழாந் திருநாள் மாலை நடக்கும் தோட்டவுத்ஸவத்தில் பெருமாளை அப்ரதக்ஷிணமாக எழுந்தருளும் படிக்கும், எட்டாம் திருநாள் காலை நடக்கும் திருத்தேருத்ஸவத்தில் அனந்தாழ்வான்தோட்ட வாசலில் மருமகப்பிள்ளையான பெருமாளுக்கு அனந்தாழ்வான் மாமஞர் செய்யும் ஸமபாவனையாகத் திருப்பரிவட்டம் ஸமர்ப்பிக்கும்படிக்கும் நியமித்து நடத்தியருளிஞர். (அப்ரதக்ஷிணுத்ஸவம் இப்போது ஏழாம் நாளில் நடவாமல் தீர்த்தவாரி தினத்திற்கு மறு நாளில் நடக்கிறது). இங்ஙனே பல நியமனங்கள் திருமலையொழுகில் காணத் தக்கன. இனி அருளிச் செயல் ஸேவையில் சில திருத்தங்கள் எம்பெருமாஞரால் செய்தருளப்பட்டவை உள. அவை மேலே காண்க.

(தொடரும்)

16-ம் பக்கத் தொடர்ச்சி

நமது கருணைவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. ராமாநுஜமுனிவர் நியமித்த திவ்யப்ரபந்தானுஸந்தானத்தை அவர் விதித்தபடியே ஏற்படுத்தி உமது விருப்பப்படி நிறைவேற்றக் கடவீர். நாமும் அவரது நியமனத்தைப் பரமாதரத்தோடு ஏற்றுக்கொள்ளுகிருேம்' என்று நியமிக்க, அனந்தாழ்வான் திருமுகத்தில் எழுதப்பட்ட திருவாணையின்படி ஒவ்வோராண்டும் அத்யயனுத்ஸவத்தில் முதலில் முதலாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களைத் தொடங்கி இயற்பாவை முழுதும் ஸேவித்துப் பின்பு மற்ற ஆழ்வாரருளிச் செயல்களை ஸேவித்துப் பிறகு திருவாய்மொழியைப் பத்து நாட்களில் ஒவ்வொரு பத்தாக ஸேவித்து முடித்து, அதன்மறு நாளில் தமக்கு இஷ்டமான மதுரகவிகளின் கண்ணிநுண்சிறுத்தாம்பை முக்கியமாகத் தனியே ஸேவித்தக்கதாக வரம்பு செய்து அப்படியே நடத்தி வைத்துத் திருவேங்கடமுடையானை மகிழ்வித்துக்கொண்டு அந்த மலைகுனியநின்ருரரையரை அத்திருமலையிலேயே வாழுமாறு செய்தார்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலையில் ஏழாங் கொத்து முற்றும்.

(இதிஹாஸமாலை முடிவு பெற்றது)
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## முடிவுரை :

அறிவில் மிகச் சிறந்த அனந்தார்யர் தொடுத்த 'ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலா' என்ற வடமொழி நூல், திருவேங்கடமுடையான் எம்பெருமாஞர் திருமலையனந்தாழ்வாஞகிய இவர்களின் இன்னருளைத் துணையாகக் கொண்டு, அறிவில் மிகத் தாழ்ந்த அடியேஞல் இயன்ற வரையில் கவனமாகவே தமிழில் மொழி பெயர்க்கப் பெற்று 'திருவேங்கட மலை வரலாற்று மாலை என்னும் பெயரால் 1982 மே மாதம் தொடங்கி 1985 நவம்பர் மாதமாகிய இம் மாதம் வரையில் திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத விதழில் சிறிது சிறிதாக வெளியிடப்பட்டு முடிவு பெற்றது. இது தன்னில் அடியேனுடைய அறியாமை அஜாக்கிரதை முதலிய காரணங்களால் நேர்ந்த சொற்குற்ற—பொருட் குற்றங்களை அறிஞர் பெரு மக்கள் தமது இயற்கையின்னருளால் பொறுத்தருளவேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

இவ்வடமொழி நூலை இயற்றிய அனந்தார்யர், பகவத்ராமானுஜருடைய உத்தரவின்படியே திருமலைக்கு வந்து திருவேங்கடமுடையானுக்குப் புஷ்பகைங்கர்யம் செய்தவராகவும், தமது குருவான அவ்விராமாநுச முனிவருடைய சில தருமக கட்டளைகளை நிறைவேற்றியவராகவும் இந் நூலில் 5, 6, 7ஆம் ஸ்தபகங்களில் கூறப்பட்ட திருமலையனந்தாழ்வாஞகவே இருக்கலாமென்று சில காரணங்கள் காட்டி எழுதியிருத்தலை 1982 ஏப்ரல் ஸப்தகிரி 23ம் பக்கத்தில் காணுமாறு வாசகர்கள் வேண்டப்படுகிருர்கள்.

அடியேனுடைய ஆசாரியரும் உபய வேதாந்த — ரஹஸ்யக்ரந்தங்களில் சிறந்த புலமை பெற்றவரும் தி. தி. வேத பாடசாலையில் வெகு நாட்கள் திவ்ய ப்ரபந்த-ஸ்ரீபாஞ்சராத்ராகமப் பேராசிரியராக விளங்கியவரு மான கீர்த்தி மூர்த்தி கச்சிக் கடாம்பி யாமுஞசார்யஸ்வாமி, தம்மிடம் பிற மதத்தவர் ஒருவர் தாமியற்றிய தொரு சிறு நூலைக் கொடுக்க, அதில் திருவேங்கடமுடையானை முருகஞகவும் சிவபெருமாஞகவும் திரிமூர்த்தி ஸ்வருபஞகவும் எழுதியிருக்கக் கண்டு அவரெதிரிலேயே அடியேனிடம் 'ஸ்ரீ வேங்கடாசலேதிஹாஸமாலா என்னும் வடமொழி நூலுக்குத் தமிழிலும் தெலுங்கிலும் அனுவாதம் வெளிவந்தா லன்றி இப்படிப்பட்ட திரிபுணர்ச்சிகள் நீங்கா' என்று கூறியருளிஞர்.

அவரது திருவாக்கு இன்று பலிக்கப் பெற்று அந்நூல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்து விட்டது. தெலுங்கில் மொழி பெயர்ப்பும், ஒய்வு பெற்ற எஸ். வி. ஓரியெண்டல் காலேஜ் ஸாஹித்யத் தலைமைப் பேராசிரியரும் பன்மொழிப் புலவருமான ஸ்ரீமான் என். ஸி. வி. நரஸிம்ஹாசாரியர் எம். ஏ., சிரோமணி, வித்வான் அவர்களால் இயற்றப்பட்டு முடிவடைந்து விரைவில் வெளிவர இருக்கிறது. அடியேன் தமிழ் மொழி பெயர்ப்பு எழுதுங்கால் வடமொழி முதனூலில் நேர்ந்த சில ஐயங்களைப் போக்கி உதவி புரிந்த அவ்வாசாரியரவர்கள் திறத்தில் வணக்கத்துடன் நன்றியை விண்ணப்பித்துக் கொண்டு விநயத்துடன் விடைபெறுகிறேன்.

(முற்றும்.)

# ★ கீதை காட்டும் நல்வழி ★

### சிரத்தாத்ரய விபாக யோகம்
### அத்தியாயம்—17.
### பகுதி—1.

நம்பிக்கையே மனித வாழ்வின் அடிப்படை. ஒருவரை மற்றவர் அல்லது ஒன்றை மற்றொன்று நம்பித்தான் வாழவேண்டியிருக்கிறது. இப்பிரபஞ்ச வாழ்வு நன்முறையே அமைய இறைவனிடம் நம்பிக்கை மற்றும் வேதங்களின் கூற்றில் நம்பிக்கை இன்றியமையாதது. இந்த அத்தியாயத்தில் பகவான் மூவகையான நம்பிக்கையைப் பற்றி முதலில் மொழிகிறார். தொடர்ந்து மூவகையான ஆகாரம், மூவகையான யக்ஞம், மூவகைத் தானம் பற்றியெல்லாம் விளக்கமாக எடுத்துரைக்கிறார். இந்த மூவகைப் பிரிவு சத்வ, ரஜஸ் மற்றும் தாமஸம் என்னும் மூன்று குணங்களின் அடிப்படையில் அமைகின்றன. சிரத்தை என்றால் நம்பிக்கை என்பது பொருள். த்ரயம் என்றால் மூன்று. விபாகம் என்றால் பிரிவு என்பது பொருள். எனவே இக்த அத்தியாயம் சிரத்தாத்ரய விபாக யோகம் என்றழைக்கப்படுகிறது.

சென்ற அத்யாயத்தின் இறுதியில் பகவான் வேதங்களின்படி ஒருவன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். வேதங்களின் கூற்றினை மீறி செயல்படக் கூடாது என்று வேதங்களைப்பற்றி சிலாகித்துக் கூறினார். இதைக் கேட்டதும் அர்ஜுனனுக்கு பகவான் முன்பு வேதத்தைப் பற்றிச் சொன்ன கருத்துக்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நினைவிற்கு வந்தன.

வேதங்கள் கர்மகாண்டம், ஞான காண்டம் என்ற இரண்டு பகுதிகளை உள்ளடக்கியவை. இதில் கர்ம காண்டத்தைப் பற்றி பகவான் இரண்டாம் அத்தியாயத்தில் 42 முதல் 45 வரை மூன்று சுலோகங்களில் எடுத்துரைக்கிறார். வேதங்கள் மிகப் புனிதமானவை, மிகப் பழைமையானவை, எனினும் அவை புகட்டுவதெல்லாம் சிறப்பு வாய்ந்தவை என்று முடிவு கட்டிவிடலாகாது. வேதத்தில் காணப்படும் கர்மகாண்டம் பலவகையான இன்பங்களை நாடிப் பிறவிப் பெருங்கடலில் அழுந்திக் கிடப்பவருக்கு மட்டுமே பயன்படும். காமிய கர்மங்கள் மீண்டும் மீண்டும் ஒருவனைப் பந்தத்தில் முகிழ்க்கும் எனவே பகவான்

"த்ரைகுண்ய விஷயா வேதா
நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன।"

என்று அர்ஜுனனை எச்சரிக்கின்றார். 'வேதங்கள் சத்வ, ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களை அடிப்படையாகக் கொண்டவை. நீ முக்குணங்கள் கடந்த நிலையை அடைவாயாக' என்பது இதன் பொருள்.

இதன்பின் ஒன்பதாம் அத்யாயத்தில் வேதத்தைப் பற்றிய மற்றொரு கருத்தை வெளியிடுகிறார். 'ரிக், ஸாம, யஜுர் ஆகிய மூன்று வேதங்களை அறிந்தவர்கள் யாகங்களால் என்னைப் பூஜித்து பாபத்திலிருந்து விடுபட்டு இந்திர பதவியை அடைகின்றனர். சொர்க்கத்தில் பல்வகை இன்பங்களை அவர்கள் அனுபவிக்கின்றனர். அவர்களது புண்ணியத்திற்கேற்ப வானுலகை அனுபவித்து புண்ணியம் தேய்ந்த பின்பு மண்ணுலகை மீண்டும் வந்தடைகிறார்கள்! (9-20, 21)

பின்னர் சென்ற அத்யாயத்தின் இறுதியில், "காமத்தின் வசப்பட்டு சாஸ்திரத்தின் அதாவது வேதத்தின் ஆணையை மீறி நடப்பவன் எவனோ அவன் சுகமடையான், முத்தியடையான். எனவே சாஸ்திரத்திற்கேற்ப கர்மம் செய்வாயாக' என்றும் புகன்றார்.

இவ்வாறெல்லாம் கேட்ட அர்ஜுனனுக்கு ஒரு ஐயம் எழுந்தது; அதை பகவானிடம் கேட்கிறான்; அது தான் பதினேழாம் அத்தியாயத்தின் முதல் சுலோகமாக அமைகிறது.

யே சாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய
யஜந்தே ச்ரத்தயான்விதா:।
தேஷோம் நிஷ்டா து கா க்ருஷ்ண
ஸத்வமாஹோ ரஜஸ்தம:॥ (17-1)

'கிருஷ்ணா! எவர் சாஸ்திர விதியை மீறி, ஆனால் சிரத்தையோடு கூடியவர்களாய் ஆராதிக்கிறார்களோ அவர்களுடைய நிலை சத்வமா, ரஜஸா, அல்லது தமஸா?"

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

சாஸ்திரங்களைப் பற்றி பகவான் பலவாறாகக் கூறியதும் நம்மவர் மனத்தில், எந்த சமயங்களில் சாஸ்திரங்களை அனுசரிப்பது, எப்பொழுது அவற்றை ஏற்காதிருப்பது? என்ற கேள்வி எழுகிறது. முன்னேற விரும்புபவனிடம் சிரத்தை அல்லது நம்பிக்கை உள்ளது. ஆனால் அவன் சாஸ்திரங்களைப் பற்றி எதுவும் தெரிந்து கொள்ளாது; நம்பிக்கையுடன் தேவாராதனையிலும், யாகங்கள் போன்ற கர்மங்களிலும் ஈடுபடுகின்றான். அப்படிச் செய்ததனால் அவன் சத்வகுணத்தினால் மேன்மையடைகிறானா, அல்லது ரஜோ குணத்

துக்குட்பட்டு இடை நிலையில் நின்று விடுகிறானா, அல்லது தமோ குணத்துக்கு ஆட்பட்டுக் கீழ்மை அடைகின்றானா என்பதுவே அர்ஜுனன் ஈண்டு எழுப்பும் கேள்வியாகும். சாஸ்திர அறிவு மனித வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாததுதானா, அஃதின்றேல் என்ன ஆகும் என்றும் இதை நாம் பொருள் கொள்ளலாம்.

வேதம் படிக்க நேரமில்லை, வேதம் படிக்க சம்ஸ்கிருத அறிவு கிடையாது, வேதம் பயிற்றுவிக்க குரு கிடைப்பதில்லை, ஆனால் நம்பிக்கையுடன் தனது கடமைகளை ஒருவன் செய்கிறான் எனில் அவனது நிலை என்ன?

''சாஸ்திரங்களோ எண்ணற்றவை. இக்கலிகாலத்தில் அவற்றைப் பற்றி நினைக்க முடியாத அளவு லௌகிகச் சூழ்நிலை. மனமோ நிலைகொள்ளாது தடுமாறுகிறது. சாஸ்திரங்களிலும் முன்னுக்குப் பின்னாகப் பொருள் படும்படியான கருத்துக்கள் காணப்படுகின்றன. சாதாரண மனிதன் சாஸ்திரங்களைப் படிக்காது ஏதோ பூஜை புனஸ்காரம் என்று பக்தியுடனும் நம்பிக்கையுடனும் இறைவனை வழிபட்டால் அவனது, நம்பிக்கை எத்தகையது? அவன் எத்தகைய கதியை அடைகிறான்? என்பதுவே அர்ஜுனனது கேள்வி. நம்மில் பெரும்பாலோர் இந்த நிலையில்இருக்கின்றோம் இல்லையா? எனவே இது நமக்கு மிகவும் பொருந்தும் ஒரு கேள்வியாகும்.

அர்ஜுனனது கேள்விக்குப் பகவான் பதிலளிக்கிறார்.

த்ரிவிதா பவதி ச்ரத்தா
தேஹினாம் ஸா ஸ்வபாவஜா |
ஸாத்விகீ ராஜஸீ சைவ
தாமஸீ சேதி தாம் ச்ருணு ||(17-2)

'மனிதர்களுக்கு இயல்பாயுண்டான சிரத்தையானது சாத்விகமென்றும் ராஜஸமென்றும், தாமஸமென்றும் மூவகைப்படும். அதைக் கேட்பாயாக!'

இந்த சுலோகத்தில் 'தேஹினாம்' என்ற பதத்தை பகவான் பயன் படுத்துகிறார். தேஹம் என்றால் உடல் என்பது பொருள். தேஹத்தை யுடையவன் 'தேஹி' எனப்படுகிறான். ஏன் இந்த குறிப்பிட்ட சொல்லை இங்கே அவர் பயன்படுத்த வேண்டும்? நாம் எடுத்திருக்கும் இந்த நமது உடலுக்கும் இடையே தொடர்பு மிகவும் உண்டு.

நமது இயற்கையான சுவபாவத்திற்கேற்ப நமது ஆசைகள் உருவாகின்றன. ஆசைக்கேற்ப செய்கைகளும், செயல்களின் அடிப்படையில் பிறவியும் அமைகிறது. மரமும் விதையும் போல, உடலும் பிறவியும் தொடர்புடையவை. விதை அழிந்து மரம் உருவாகிறது. மரம் மீண்டும் விதைகளை உண்டு பண்ணுகிறது. இந்த விதை-மரம்-விதை-மரம் சக்கரம் சுழன்று கொண்டேயிருக்கிறது. இது போலவே மனிதன் உடலெடுக்கிறான், செயல்புரிகிறான், சுவபாவங்களை உண்டு பண்ணுகிறான், மரிக்கிறான். மீண்டும் ஒரு புதிய உடலை எடுக்கிறான். இந்தச் சக்கரம் தொடர்கிறது? எது வரை? முக்குணங்களைக் கடந்து அவன் ஆத்மக் ஞானம் அடையும் வரை.

சுவபாவம் என்பது என்ன?

முந்தையப் பிறவியில் நாம் செய்த புண்ணிய பாபக் கர்மங்களின் பதிவுகளேயாகும். சித்தம் அல்லது அடிமனத்தில் இவை பதிந்து கிடக்கின்றன.

நம்மிடம் இருக்கும் நம்பிக்கைக் கேற்ப வாழ்க்கை நமக்கு ஓயாது பாடம் புகட்டிக் கொண்டேயிருக்கிறது. இயற்கையாகவே நம்பிக்கை மூன்று வகைப்படுகிறது. சாத்விக, ராஜஸிக, தாமஸிக நம்பிக்கை காணப்படுகிறது. நம்பிக்கை இல்லாத எவரையுமே காணமுடியாது. பொதுவாக நம்பிக்கை ஆங்கிலத்தில் faith எனப்படுகிறது. இருப்பினும் இதை belief, faith, conviction என்றும் மூவகைப்படுத்தலாம். நாம் நம் அடுத்த வீட்டுக்காரரின் வார்த்தைகளில் நமக்கு அதிகம் நம்பிக்கை உண்டு. இது faith. நமது சொந்த அனுபவங்களை நாம் மிக அதிகம் நம்புகிறோம். இது conviction எனப்படுகிறது. இவற்றில் ஆற்றல் குறைந்தது belief. ஆற்றல் அதிகமானது conviction.

நம்பிக்கைதான் ஒருவனது குணா திசயத்திற்கு ஆதாரமாயமைகிறது. மரத்தின் விதைகளையும் மூவகைப் படுத்தலாம்.மிகவும் செழிப்பானவை சாதாரணமானவை, மட்டமானவை. விதையின் தரத்திற்கேற்ப நாற்று உருவாகிறது. இது போல மனிதனின் சுவபாவத்திற்கேற்ப நம்பிக்கையும் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்னும் மூவகையில் அமைகிறது.

(தொடரும்)

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள் அவற்றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓர் இதழ் மட்டுமே அனுப்பப்படும்: இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினால், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

# அருள் வெள்ளம்

நூற்பெயர் : அருள் வெள்ளம்.
ஆசிரியர் : ஆர். கோபாலன்.
விலை : ரூ. 7/-
கிடைக்குமிடம் : ஆர். கோபாலன், 11-7-3 சுந்தர அய்யர் தெரு, சித்தூர்-ஆ: பி.

"அருள் வெள்ளம்" என்ற திரு. ஆர். கோபாலன் அவர்களால் இயற்றப்பெற்ற நூல் அன்னை திருச்சதகம் முதலிய ஒன்பது பகுதிகளைக் கொண்டுள்ளது. ஆசிரியர், தம் அனுபவத்தில் முகிழ்த்த தெய்வம் பற்றிய கருத்துக்களைப் பல யாப்பு வடிவங்களில் தந்துள்ளார். அவர்களுடைய இலக்கணப் புலமையும், இலக்கியப் புலமையும் நூலில் எங்கும் மிளிர்கின்றன. பக்தி உணர்ச்சி ஊட்டுவனவாக, தமிழுணர்ச்சி புகட்டுவனவாக, இலக்கிய நுகர்ச்சி அளிப்பனவாக இப்பாடல்கள் அமைந்துள்ளன. பதினொரு யாப்பு வகைகளைப் பொருத்தமுறப் பயன்படுத்தியிருப்பதும் படித்து இன்புறத்தக்கன.

தேசிய ஒருமைப்பாடு வேண்டும் என்று வலியுறுத்தும் இந்நாளில் அம்முறையில் பல சமயக் கடவுளர்களை ஒருவராக்கி (அ. திரு: 34) சமயக் காழ்ப்பை நீக்கியிருப்பது குறிப்பிடத்தக்கது. உலகத்தில் உள்ளவற்றையெல்லாம் இன்பமாகக் கருதும் பாங்கு வேண்டும் என்ற ஆன்றோர் வாக்கிற்கு எடுத்துக் காட்டாக உமையம்மை விளங்குகின்றாள், (அன். திரு. 28) என்று காரணங்களோடு கூறியிருப்பது அவருடைய சிந்தனைச் சிறப்பைக் காட்டும்.

ஈசன் அம்மைக்குப் பாதி உடலைக் கொடுத்தான் என்ற கருத்தை மாற்றி ஈசன் அம்மைக்குப் பாதி உடலைக் கொடுக்க, அம்மையும் தன் பாதி உடலை அவனுக்குக் கொடுத்தாள் என்று புதுமையாகக் கூறியிருப்பது ஆசிரியரின் கற்பனைப் பொலிவைக் காட்டுகிறது.

அன்னைக்குப் பிறந்த இடம் கல், புகுந்த இடம் கல், ஆசிரியரின் மனமும் கல்; ஆதலால் கல்லில் இருந்த பழக்கம் காரணமாகத்தான் மனக் கல்லில் அகலாது இருக்க வேண்டுமென்று (அன். திரு: 20) குறிப்பால் உணர்த்தியிருக்கின்றார்.

பார்வதி என்பது பர்வதராஜனுடைய இமவான் மகள் எனப் பொருள் படும். ஆயினும் கங்கைக்கு இன்றி அன்னைக்கே சிறப்பாக இருத்தல் (48) 'பண்புடையார் பட்டுண்டுலகு' என்பதைச் சுட்டுகிறது.

பெண்டாட்டி வீட்டைப் பெரிதாகக் கருதல் என்ற பழமொழிக்கு விளக்கமாய் அமைந்துள்ளது (47)

இறைவிக்கே அறிவுரை கூறும் பாங்கு, பிறரையும் தாமாகக் கருதும் சால்பு புலப்படுகின்றன (52).

'கற்றுரை யான் வேண்டேன், கற்பனவும் இனி அமையும்', 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற மணிவாசகரின் வரிகளை நினைவு படுத்தும் முறையில் 'வேதம் புகல்வோர்க்கும் விண்ணிடத்தே வாழ்வோர்க்கும் வாதம் புரிவோர்க்கும் உன்னருள் கிடையாது' என்று கூறியுள்ளார் (57).

இறைவி சிந்தையில்தான் குடிகொண்டிருக்கிறாள் என்பதை 'விண்டலத்தும் மண்டலத்தும் விங்கலையார் வேலையிலும் கண்டுவக்க நின்னைக் கருதுவரே - எண்டிசையும்' தேடிப்பயன் இல்லை. சிந்தையில் தான் எப்பொழுதும் தங்கியிருக்கிறாள் என்று கூறுகிறார்(65). அன்னையின் அடிமலரைப் பாடுவதே மண்ணில் பிறந்த பயன் ஆகும் (95).

ஈசனின் திருவடியையே பல்வேறு சந்தங்கொண்ட பாடல்களால் பாடியிருப்பது "ஒரு துறைக் கோவையை ஒரு பொருள் மேல் பாடியது போல் உள்ளது. இறைவனின் நூற்றெட்டுத் தாண்டவங்களின் முத்திரைகளில் சிலவற்றைச் சுட்டியிருப்பது அவருடைய பரத நூற்பயிற்சியைப் புலப்படுத்தும்.

முருகன் திருச்சதகத்தில் கந்தபுராணச் செய்திகள், ஆசிரியரின் பக்தி உணர்வுகளை இனிது புலப்படுத்துகின்றன. "சிறிய குடும்பத்தைக் காக்கவே நான் பாடுபடுகின்றேன். நீ பல அண்டங்களை இரக்க மிகுதியால் காக்கின்றாய். உனக்குள்ள துன்பத்தை நினைந்து வருந்துகின்றேன்" என்று கூறுவது (முரு.சத.35) கண்ணப்பரின் கரையிலா அன்பை நினைவுபடுத்துகிறது.

"பல்லாயிர மொழி பாரினில் மன்னிப்
பயின்றிடினும்
சொல்லார் தமிழா மமிழ்தினை
வேண்டிச் சுவைத்திடுவாய்
(முரு. சத. 53)

என்று தமிழ்ப்பற்றைப் புலப்படுத்துகிறார்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த
தலைவனை"

என்ற அப்பர் வாக்கிற்கேற்ப என் உறுப்புக்கள் உன்னைப் பணிந்து ஏத்தவில்லை. அவ்வாறான உறுப்புக்களை நான் பெற்றிருப்பதால் மிகவும் வருந்துகிறேன் என்று அவை எனக்குச் சுமையேயன்றி நன்மையளிப்பது இல்லை எனச் செப்புகிறார். (முரு. திரு. 54) சமுதாயத்திடம் இரக்கம் காட்ட வேண்டும் என்பதை வலியுறுத்தும் முகத்தான்,

"நெருக்கி யுயிர்களை வாட்டிடும் தீமை
கள் நீங்கிடவே
புரக்கும் நினதடி வேலவா பற்றிடப்
போந்தனனே"
(முரு. திரு. 99)

போல் திருவேங்கடத்தானைத் தொழாதவர்களுக்கு உண்டாகும் கேடுகளைக் குறிக்கிறார் (திருவேங். மா. 62) எல்லாக் கடவுளர்களின் உருவமாகத் திருவேங்கடவனைத் தொழலாம் என்பதால் அவருடைய சமயப் பொதுமையைக் காணலாம் (திருவேங். மா. 64).

எல்லா உயிர் வாழினங்களுக்கும் தங்க இல்லம் அளித்த இறைவன் மனிதனுக்குத் தரவில்லையே என்று கூறுவது சிந்தித்தற்குரியது (திரு வேங். மா. 67).

"இன்பமும் வேண்டு மூன்ற னிணையடி
தொழுவதற்குத்
துன்பமும் சிறிது வேண்டும்"
(திருவேங். மா. 69)

என்று கூறுவது உளநூல் தத்துவம் சார்ந்தது. பெண்கள் துயர் தந்து நரகிற்குச் செலுத்துகின்றனர் என்று கூறுவது (திருவேங். மா. 81) வேற்றுச் சமயச் சாயல் உடையது.

மாதவ மந்திரத்தில் பாரதம், ஆழ்வார் பாடல்கள், இவற்றில் கூறப் பட்டுள்ள செய்திகள் பக்தி உணர்ச்சி மிகக் கூறப்பட்டுள்ளன. கோவிந்த னிடம் கேட்கும் ஒரே வரமாக,

"பொன்னார் நினதடிகள் போந்தென்
னுளந்தனிலே
மன்னித் தழைக்க வரந்தருவாய்"

என்று கூறுவது பக்தியின் மேம்பாட் டைக் காட்டும். (மாத. மந் 97).

இம்முறையில் 'அருள் வெள்ளம்' பக்தி வெள்ளமாக, இலக்கிய வெள்ள மாக, சமயப் பொதுமையின் வெள்ள மாக, யாப்புக்களின் சந்தங்களின் வெள்ளமாக, புலமையின் வெள்ள மாக விளங்குகின்றது.

Dr. R. அழகப்பன், M.A., M.Litt, Ph.d.
அண்ணாமலை நகர்.



## திருமலை இறைவன் அருள் புரிவான்!

கவிஞர் மதிவண்ணன்—சென்னை.

பாச வாழ்க்கை பள்ளத் தாக்கினில்
பக்தன் விழுந்து தவிக்கின்றான்!
பரந்தா மன் ஏழு மலைமேல் இருந்தும்
பரிவுடன் கைகள் நீட்டுகிறான்!—அந்த
பக்தனைத் தன்வசம் கூட்டுகிறான்!
ஆயிரம் காலமாய் இருள் படர்ந்தாலும்
அகல் விளக்கொன்றால் அதுபோகும்!
வாயினில் மாயவன் நாமம் ஒருமுறை
வந்தால் பிறவித்தளை நீங்கும்!—நம்
மனதில் வசந்த அலை தேங்கும்!
வாழ்க்கைக் கொருநிதி, வைப்புநிதி ஆம்!
வெங்கடா ஜலபதியே!
வருமே நிம்மதி! அவனின் சந்நிதி!
வாழ்த்துவோம் திருப்பதியே!—அவன்
மலர்ப்பதம் நம் கதியே!

என்று கூறுவது "உண்டாலம்ம இவ் வுலகம்......... தனக்கென வாழா பிறர்க்கென முயலுநர் உண்மை யானே" என்ற புறநானூற்றுத் தொடர்களை நினைவுறுத்தும்.

"மாமாலையில்" திருமகளின் பல் வேறு சிறப்புக்கள் கவிநயத்தோடு கூறப்பட்டுள்ளன. திருமகளின் திரு வடிகள் தாமரையால் சிவந்தனவா? தாமரைதான் திருவடியால் சிவந் தனவா? சிவந்த இரண்டும் தாமாகச் சேர்ந்தனவா" என்பது (மாமாலை 20) சமுச்சய உவமையின் வளர்ச்சி யெனக் கூறலாம்.

செல்வம் பெறுவதற்குத் திருமகள் அருள் வேண்டுவதோடு, அதைத் துய்ப்பதற்கும் அருள் வேண்டும் (மாமாலை 64) என்று கூறுகிறார்.

திருவேங்கடப் பாமாலையில் திரு மலையின் இயற்கை வனப்பும், பல் நாட்டினர் பல்மதத்தினர் பக்தி மிகக் கொண்டு போற்றும் பாங்கும் நேரில் காண்பது போலவே கூறியுள் ளார், ஆசிரியர். திருமாலன்பர் எப்படியிருக்க வேண்டும் என்பதை,

"தண்ணிய நெஞ்சம் கல்விசான்றுய
ரொழுக்கம் பக்தி
புண்ணிய வினைகள் யாவும் பொருந்
திய திருமாலன்பர்"
(திருவேங். பா. 13)

என்று விளக்குகிறார். "மீண்டும் பிறப்புண்டேல் உன்னை மறவாமை வேண்டும்" என்று காரைக்காலம் மையார் வேண்டுவதுபோல், "நின்னையே நினைக்கும் பேற்றை நின்மலா வேண்டுவனே" (திருவேள். பா 30) என்று கூறுவர். திருவேங் கடவனைப் பூசிக்கும் முறையை (திரு வேள். மா. 39) விரிவாக நாவுக்கரசர் போல் செப்புகிறார்.

"அறத்தினூஉங் காக்கமும் இல்லை
அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு"

என்று வள்ளுவர் அறத்தை மறத்த லால் ஏற்படும் கேடுகளைச் சுட்டியது

# குருஞான சம்பந்தர்

திரு. கி. அரங்கசாமி, எம்.ஏ.,
பட்டாம்பி.

தமிழக வரலாற்றை ஆராயும் பொழுது ஞானசம்பந்தர் என்னும் பெயர் கொண்ட மூன்று சான்றோர்கள் வாழ்ந்திருந்ததாகத் தெரிகிறது. அவர்களுள் முதலாமவர் தமிழும், சைவமும் தழைத்தோங்க சீர்காழிப் பதியில் அவதரித்த திருஞானசம்பந்தர். இரண்டாமவர் சந்தானக் குரவர்களுள் ஒருவரான மறைஞான சம்பந்தர். மூன்றாமவர் தருமபுர ஆதீனத்தை நிறுவிய குருஞான சம்பந்தர்.

குருஞானசம்பந்தர் திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலிச் சீமையில் ஸ்ரீவில்லிப்புத்தூர் என்னும் திருத்தலத்தில் அவதாரம் செய்தார். இளமையிலேயே வடமொழி தென்மொழிகள், வேதம், சோதிடம் போன்றவற்றில் பெரும் புலமை பெற்றார்.

இவரது பெற்றோர் ஒருமுறை சொக்கநாதப் பெருமானைத் தரிசிப்பதற்காக மதுரை வந்தனர். தம்முடன் தமது அருமைப் புதல்வரையும் அழைத்து வந்தனர். கங்கையும் பிறையும் பாம்பும் உடுக்கையும் அணியாகக் கொண்ட கண்ணுதலைத் தரிசித்து விட்டு இவர் தம் பெற்றோரை நோக்கி "ஆலவாய் அழகருடன் இருக்கும் படியான பேறு பெற்று விட்டேன். நீங்கள் இனி அமைதியாகச் செல்வீர்களாக!" என்று விடை கொடுத்து விட்டு மதுரையிலேயே தங்கி விட்டார்.

மதுரையில் தங்கியிருந்த பொழுது ஆலவாய்க் கடவுள் இவர் கனவில் தோன்றித் தாம் பொற்றாமரைக் குளத்தின் ஈசான திசையில் ஒரு பெட்டகத்தில் இருப்பதாகவும், தம்மை எடுத்துப் பூசிக்குமாறும் ஆணையிட்டார். அதன்படியே இவர் மறுநாள் குளத்தில் மூழ்கிப் பேடகத்தை எடுத்து வந்து அதற்குள்ளிருந்த சிவலிங்கத்தைப் பூசித்து வந்தார்.

இப்படியாகச் சில நாட்கள் சென்றபின் மதுரைக் கடவுள் இவர் கனவில் மீண்டும் தோன்றித் திருவாரூருக்குப் போய் அங்கு உறையும் ஞானப்ரகாசர் என்பவரிடம் ஞானோபதேசம் பெறுமாறு ஆணையிட்டார். அதுபோலவே ஞானப்ரகாசர் கனவிலும் தோன்றி இவருக்கு உபதேசம் செய்யுமாறும் பணித்தார்.

கட்டளையைச் சிரமேற் கொண்டு இவர் திருவாரூர் சென்று குருநாதரிடம் முறைப்படி ஞானோபதேசம் பெற்று வருங்காலத்தில ஒருநாள் குருநாதருடன் மற்றும் பல சீடர்கள் புடைசூழ அர்த்தயாம பூசைக்குச் சென்று விட்டுத் திரும்பும் வேளையில் விளக்கெடுப்பவன் தூங்கி விட்டதைக் கண்டு தாமே விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு குருவுக்கு முன்னே சென்றார். மடத்தருகே சென்றதும் குருநாதர் இவரை வெளியே நிற்கப் பணித்து உள்ளே சென்றார்.

குருநாதர் ஆணைப்படி கையில் விளக்கை ஏந்தியவாறு விடியும்வரை வெளியிலேயே நின்றார். அன்று இரவு முழுவதும் பெருமழை பெய்தது. சூறைக்காற்று சுழன்று அடித்தது. ஆயினும் இவர் கையிலிருந்த விளக்கு அணையவில்லை. மழை இவர் மீது ஒரு துளியும் பெய்யாமல் ஒரு கோல் அளவுக்கு அப்பால் பெய்ததுமன்றி, மழை நீரும் உட்புகாமல் ஒரு கோல் தள்ளியே ஓடியது.

விடியலில் வெளியே வந்த குருபத்தினி இது கண்டு வியந்து உள்ளே சென்று ஞானப்ரகாசரிடம் இந்த அற்புதத்தைத் தெரிவித்தார். அவர் வெளியே வந்து தமது மாணாக்கரின் நிலையைக் கண்டு மகிழ்ந்து "ஞான சம்பந்தரே! நீர் பக்குவம் பெற்று விட்டீராதலால் இனி விரும்பியஇடத்துக்குச் சென்று பக்குவான்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்வீராக!" என்று அன்புக் கட்டளையிட்டார்.

குருவாணைப்படி ஞானசம்பந்தர் திருவாரூருக்கு இரண்டு போசனை தூரத்திலுள்ள அகத்திய முனிவரால் பூசிக்கப்பட்டதும், காவிரியின் தென் கரையில் அமைந்ததுமான தருமபுரத்தை அடைந்து ஆதீனத்தை நிறுவி குருஞானசம்பந்தராக சமய பரிபாலனம் நடத்தி வந்தார்.

குருஞானசம்பந்தரது ஞானநிலையைக் கண்ட அகத்தியரது மாணாக்கர்கள் வியந்து, தங்களது ஆசிரமத்தையும், தருமபுரேசர் கோவிலையும் இவரிடம் ஒப்படைத்து, நித்திய நைமித்தியங்களை நன்கு நடத்திவர இரசவாதம் முதலியவற்றை உபதேசித்து, கோவிலைப் பரிபாலனம் செய்து வருமாறு ஆணையிட்டுச் சென்றார்கள்.

குருஞானசம்பந்தர் ஒருமுறை சிதம்பரம் சென்று நடராஜப் பெருமானை வணங்கிவர விரும்பினார். அதன்படி சிதம்பரம் சென்று ஆயிரக் கால் மண்டபத்தில் தியானத்தில் அமர்ந்தார். திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் அளித்ததைப் போலவே ஒருநாள் மன்றாடும் பெருமானின் ஆணைப்படி சிவகாமிதேவியார் தமது பள்ளியறையில் வைத்திருந்த பாயாசத்தையும, திருவமுதையும், கங்கை நீரையும் கொண்டுவந்து கொடுத்து உதவினார்.

இவ்வாறு தருமபுரத்தில் நல்லரசு செலுத்தி வருகின்ற நாளில் தமக்குப் பரிபூரண நிலை வருவதைத் திருவருளால் உணர்ந்து, ஆசிரமத்தின் மேற்புரம் 'ஞானபுரீசுவரர்' என்னும் திருப்பெயரால் சிவலிங்கபிரதிஷ்டை செய்து தம் சீடர்களுள் ஒருவரான 'ஆனந்தப்—பரவசர்' என்பவருக்கு ஞானோபதேசம் செய்து, பீடாதிபதியாக நியமித்து சிவ சமாதி கூடினர். சின்னாட்களில் ஆனந்தப்பரவசரும் சிவத்துடன் ஒன்றுபட்டார்.

தலைவரில்லாமல் ஆதீனம் அநாதையானது. அப்பொழுது குருஞானசம்பந்தர் சமாதியினின்றும் வெளியே வந்து 'சச்சிதானந்தர்' என்பவருக்கு பீடாதிபத்யத்தை வழங்கினர். சச்சிதானந்தருக்குத் திருவருள் கூடாமையினால் நிஷ்டானுபூதி ஏற்படவில்லை. அதனையுணர்ந்த ஞானசம்பந்தர் அவரைச் சார்ந்திருந்த மலமாயைகள் அற்றுப்போகும்படி சில பாடல்களைப் பாட சச்சிதானந்தரும் பற்றொழிந்து, ஞானம்பிறந்து நிஷ்டானுபூதியில் திளைத்தார்.

குருஞானசம்பந்தர் பிரதிஷ்டை செய்து ஜீவ சமாதியில் இருந்த காரணத்தால் அக்கோவிலை ஒரு சமாதி என்று இகழ்ந்தான் ஒரு தஞ்சை மன்னன். உடனே அவனது இரு கண்களும் பார்வையற்றுப் போய்விட்டன. பின்னர் தனது குற்றத்தை யுணர்ந்து ஞானபுரீசுவரரை வணங்கிக் கண்பார்வை பெற்றான்.

குருஞானசம்பந்தர் சிவபோக சாரம், சோடசகலா பிரசாத கட்கம், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், முத்தி நிச்சயம் போன்ற பல நூல்களை யாத்துள்ளார். இவற்றுள் சிவபோக சாரம் மிகவும் பெருமை வாய்ந்ததாகும். ஆணவம் முதலிய பாசங்களில் நின்றும் நீங்கி, உயிர் சிவானந்தப் பெருங்கடலில் திளைத்துச் சிவனும் தானும் ஒன்றென்பதும், இரண்டென்பதும் இன்றிக் கலந்து நிற்கும் பேரின்ப நிலையைப் பேசும் அரிய நூலாகும்.

இந்நாளில் தருமபுர ஆதீனம் தமிழும் சைவமும் வளர ஆற்றி வரும் அரும்பணி அளவிடற்கரியதாகும்.

★

---

# ஐப்பசிச் சதயத் திருநாள்

ஐப்பசி மாதம் சதயத் திருநாள் இராஜராஜ சோழன் பிறந்த பெரு நாளாகும். இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தர சோழனுக்கும் வானவன் மாதேவிக்கும் பிறந்தான். இராஜராஜன் பிறந்தபோது பூமியில் ஓர் ஒளிவட்டம் தோன்றியதாகவும் அவன் திருக்கரங்களில் சங்கும் சக்கரமும் ரேகை உருவில் திகழ்ந்ததாகவும் திருமாலே இராஜராஜன் என்றும் திருவாலங்காட்டுச் செப்பேடு ஒன்று கூறுகிறது இராஜராஜனின் தமையன் ஆதித்தகரிகாலன் வஞ்சகரால் கொல்லப்பட்டான். சுந்தர சோழரும் வானவன் மாதேவியும் அவன் பிரிவால் இறந்தனர். சுந்தரசோழனின் பெரிய தந்தையரான கண்டராதித்தரின் மகன் உத்தம சோழன் இராஜராஜன் அனுமதியுடன் அரியணை ஏறினான். கி.பி. 984ல் அவன் இறக்கவே கி.பி. 985ல் தனது 25-ம் பிராயத்தில் இராஜராஜன் அரியணை ஏறினான்.

வடக்கே நர்மதை முதல் தெற்கே ஈழம் வரை இவன் ஆட்சி பரவியது. உலகமாதேவி, சோழமாதேவி, திரைலோக்யமாதேவி, பஞ்சவன்மாதேவி, அபிமானவல்லி, பிருத்வி மாதேவி, மீனவன்மாதேவி, இலாடமாதேவி, வில்லவன் மாதேவி, மானவன் மாதேவி, வீரநாராயணி என்ற பதினொரு மனைவிகள் இவனுக்கு உண்டு. இவர்களில் உலகமாதேவியே பட்டத்தரசி.

இராஜராஜனுக்கு மூன்று குழந்தையர் உண்டு. இராஜேந்திரன் என்ற மகனும், சைவர்களால் மாதேவடிகள் என்று போற்றப்பட்ட சந்திரவல்லி, குந்தவை ஆகிய இரு பெண்கள் ஆவர். இராஜராஜனின் அன்புத் தமக்கை குந்தவை நாச்சியார் அவனுக்கு அரசியலில் உற்ற ஆலோசகராக விளங்கினார்.

இராஜராஜன் காலத்தில் நிலமளக்கப் பயன்பட்ட கோல் பதினாறு சாண் உடையதாக 'உலகளந்தகோல்' எனப் பெயர் பெற்றதாக அமைந்தது. ஆடவல்லான் மரக்கால், ஆடவல்லான் எடைக்கல் என்ற பெயரில் முகத்தல் அளவை, நிறுத்தல் அளவை அமைப்புக்களை ஏற்படுத்தினான். குடவோலை முறையில் தேர்தல் நடத்திப் பல்வேறு வாரியங்களை அமைத்து ஊராட்சி முறையை நிறுவினான். தன்னை 'ஜனநாதன்' அதாவது மக்கள் தலைவன் என்று அழைத்துக் கொண்டான். மாநில அளவில் மண்டலம் என்றும், மாவட்ட அளவில் வளநாடு என்றும், தாலுகா அளவில் கூற்றம் என்றும் பிரித்து ஆட்சி முறை செய்தான். சோழநாட்டை 9 வளநாடுகளாகப் பிரித்திருந்தான்.

மகாசபை என்பது நீதிமன்றம். நீதி கூற 'அறம் கூறு அவையம்' என்ற சான்றோர்கள் அடங்கிய அமைப்பு மன்னனுக்கு உறுதுணையாக இருந்தது. மன்னனின் கட்டளைகளை எழுத திருமந்திர ஓலைநாயகம் என்ற அதிகாரி இருந்தார். வரியிலார் என்ற அமைப்பினர் வரிவிதிக்கும் கடமைகளை செய்தனர். நாவிதர், தச்சர், கொல்லர், வண்ணார், தட்டார இடையர், குயவர், குருக்கள் ஆகியோருக்கு வரிச்சலுகை உண்டு.

இராஜராஜன் காலத்தில் கோட்டையின் உள்பகுதி உள்ளாலை எனவும், வெளிப்பகுதி புறம்பாடி என இருபகுதிகளாக அழைக்கப்பட்டது. உள்ளாலையில் சாலியத்தெரு, நித்த விநோதப் பெருந்தெரு, மும்முடிச் சோழப் பெருந்தெரு, வானவன் மாதேவிப் பெருந்தெரு, வீர சிகாமணிப் பெருந்தெரு, கேரளவீதி ஆகியவை இன்றியமையாத தெருக்களாக இருந்தன. புறம்பாடியில் வடக்கு தளிச்சேர், தெற்கு தளிச்சேர், காந்தர்வத் தெரு, ரௌத்ர மாகாளத்து மடவளாகத்தெரு, பிரமகுட்டத்துத் தெரு, ஜய பீமதளித்தெரு, ஆனைக் காடுவார் தெரு, பன்மையார் தெரு, வீரசோழப்பெருந்தெரு, இராஜராஜ வித்யாதரப்பெருந்தெரு, வில்லிகள் தெரு, மடைப்பள்ளித் தெரு, ஜயங்கொண்ட சோழப்பெருந்தெரு, சூரசிகாமணிப் பெருந்தெரு என்ற தெருக்கள் இருந்தன. திருபுவன மாதேவிப் பேரங்காடி, வானவன் மாதேவிப் பேரங்காடி, கொங்காள்வார் அங்காடி, இராஜராஜ பிரம்ம மஹராஜ அங்காடி என்ற அங்காடிகள் இருந்தன.

மூலப் பரிவாரம் என்ற நிலைப் படையும் மற்றும் ஆபத்துதவிப் படை, வேளைக்காரப் படை வகைகளில் முப்பத்தொரு பிரிவும் இருந்தன. வடக்கே துங்கபத்திரை முதல் தெற்கே ஈழம் வரை இவனது ஆட்சி பரவியிருந்தது. இவனது வீரர்கட்கு கீழைக்கடல் நீச்சல்குளமாக விளங்கியது என்று வரலாற்றுய்வாளர் கூறுவர்.

தில்லையில் சிறை கிடந்த தேவாரத்தை வெளிக்கொணர்ந்து பண்ணிசைத்து பக்தி வளர்த்த சைவப் பற்றாளன் இராஜராஜன் என்றால் மிகையாகாது. இவன் சிறந்த சிவ பக்தன் ஆயினும் எல்லா மதங்களிடமும் மதிப்பு மிக்கவன். கடாரத்தரசன் சூளாமணிவர்மனால் தொடங்கப்பெற்று அவன் மகன் விஜயோத்துங்க வர்மனால் முடிக்கப்பட்ட

திரு. ஆர். சுந்தரராஜன், எம்.ஏ., பிஎட்.
பழமார்நேரி.

பௌத்த விகாரத்திற்கு இராஜ ராஜப்பள்ளி என்னும் தன் பெயரை வைக்க அனுமதித்தான். அன்றியும் ஆனைமங்கலத்தைப் பள்ளிச்சந்த மாகக் கொடுத்தான். பெங்களூரை அடுத்த மணலூரில் ஜயங்கொண்ட சோழ விண்ணகரம் என்ற திருமால் கோயிலையும், தலைக்காட்டுக்கு அருகில் ரவிகுலமாணிக்க விண்ணகரம் என்ற திருமால் கோயிலையும் இராஜ ராஜன் நிர்மாணித்து வைணவத்தின் மீது தனக்குள்ள மதிப்பைப் புலப் படுத்தினான்.

தஞ்சைப் பெருவுடையார்கோயிலை உலகு புகழக் கட்டி ஆயிரக்கணக்கிலான அறக் கொடைகளை அளித் தான். தஞ்சைக் கோயிலில் பணி புரிய பல ஊர்களிலிருந்தும் கணக்கர்கள், திருமெய்க்காப்பாளர்கள், பண்டாரிகள், பரிசாரகர்கள் ஆகியோரை நியமித்து அந்தந்த மெய்க் காப்பாளர்கட்கு அந்தந்த ஊர்களே ஊதியம் தரவேண்டும் என்ற கட்டளையும் பிறப்பித்தான். திருக்கோயில் கஜானாவில் இருந்து மக்கள் பணத்தைக் கடனாகப் பெற்று வட்டியுடன் செலுத்த வழிவகை செய்தான். கோயிலை ஒரு வகையில் வங்கியாகவே பயன்பட்டது. திருக்கோயில் அறுவை சிகிச்சை சாலை அமைத்து சிறப்பான வைத்தியமும் புரிந்து கோயிலைச்சமுதாயக் கூட மாக்கினான். ராஜராஜ விஜயம் என்ற வடமொழி நாடகத்தை சவர்ணன் என்ற புலவரைக் கொண்டு எழுதச் செய்து அதைத் திருக்கோயிலில் நடித்துக் காட்ட 402 ஆடல் மகளிரை நியமித்து அவர்கட்கு நிவந்தமளித்தான். பெரிய கோவில் கருவறை சுற்றுப் புற உட்சுவர்களில் உள்ள இராஜ ராஜன் காலத்து ஓவியங்கள் இன்றும் மங்காமல் அழகுமிளிர அமைந்துள் ளன. நாட்டியக்கலையை வளர்க்கும் பொருட்டு 108 நாட்டிய கரணங் கட்கு இராஜராஜன்அமைத்த சிற்பங் களில் இன்றும் 80க்கும் மேற்பட் டவை பெரிய கோயில் கோபுரத்தின் மேல் பகுதியின் அடிவரிசையில் அமைந்துள்ளன. இவன் நவவித நடசாலை என்ற நாட்டிய அரங்கை அமைத்தான். தற்போதைய சங்கீத மஹால் என்ற பெயருடன் விளங்கும் இடம் இதுவேயாகும். ஆரியக் கூத்து, சாக்கையர்கூத்து, அகமாக்கம் எனப்படும் திருவெம்பாவைக் கூத்து ஆகிய கூத்து வகைகளை மானியமளித்து வளர்த்தான்.

வீணை வாத்யத்தை ஒய்மானாட்டிலிருந்து முதன் முதலாகத் தஞ்சைக் குக் கொண்டு வந்தவன் இராஜராஜனேயாகும். கல்லாவின் கீழமர்ந்த தக்ஷிணாமூர்த்தி சிற்பம் கற்சிற்பமாகவே செய்யப்பட்டு வந்தது. இதனை இராஜராஜன் ஐம்பொன் சிற்பமாகச் செய்து புதுமை புகுத்தினான். அதுவரை செப்புத் திருவுருவங்கள் உள் கூடுள்ளனவாகச் செய்யப்பட் டிருந்தன. அவற்றை கனமாக மாற்றிச் செய்யத் தொடங்கிய பெருமை இராஜராஜனையே சாரும். தமிழில் மெய்க்கீர்த்தி எழுதும் மரபைத் தோற்றுவித்தவனும் இவ்வரசனே யாவான். நம்பியாண்டார் நம்பி அடிகள் மூலம் தேவாரத்தைத் திருமுறைகளாகத் தொகுக்கச் செய்தவனும் இராஜர்ராஜனேயாவான். தமிழிசைப்பாக்களைப் பாடிய கருவூர்த் தேவர், சேந்தனார் ஆகியோரும் இவனால் போற்றப்பட்டவரேயாவர்.

இராஜராஜன் ஆட்சிக் காலத்தில் தஞ்சை நகரம் கீழ்த்திசையில் புன்னை மாநகர் மாரியம்மன் கோயிலை எல்லையாகவும், நாஞ்சிக்கோட்டை, கோட்டைத் தெருவை தெற்கெல்லையாகவும் வல்லம், கள்மேடு ஆகியவற்றை மேற்கு எல்லையாகவும் வின்னாற்றை வடக்கு எல்லையாகவும் கொண்டிருந்தது.

கி.பி. 1004ம் ஆண்டு தஞ்சைப் பெரிய கோயிலை இராஜராஜன் கட்டத் தொடங்கி கி.பி. 1010ல் முற்றுவித்து கும்பாபிஷேம் நடத்தினான். மகுடம் என்னும் ஆகம நூலின்படி இக்கோயில் கட்டப் பெற்றது. இப் பெருவுடையார் கோயில் 193 அடி நீளம் 397 அடி அகலமுடையது. நடு விமானம் 215 அடி உயரமுடையது. உச்சியிலுள்ள ஒரே கல்லின் எடை 80 டன் ஆகும். விமானத்தின் மேலுள்ள செப்புக் குடம் 3083 பலம் நிறையுடையது.

கோயிலின் முதல் கோபுரமான திருத்தோரண வாயில் கேரளாந்தகன் வாயில் என்றும், இரண்டாம் வாயிலாகிய திருமாளிகை வாயில் இராஜராஜன் வாயில் என்றும் அழைக்கப்பட்டன. ஒரே கல்லால் ஆகிய நந்தி 12 அடி உயரமும் 19½ அடி நீளமும் கொண்டது. பிராகாரத்தில் சண்டேசுவரரும் நந்தியும் மட்டும் இராஜராஜன் காலத்தவை. கோயில் திருச்சுற்றுலை வடக்கும் கிழக்கும் ராஜராஜனால் கட்டப்பெற்றவை.

பெரியகோயில் ஈசனுக்கு ஆடவல்லான் என்றும், தக்ஷிண மேரு விடங்கரென்றும், தஞ்சை அழகர் என்றும் இராஜராஜேச்வரர் என்றும் பல்வகைப்பெயர்களை இராஜராஜன் சூட்டி மகிழ்ந்தான். இவ்வரசனது சிவ பக்திச்சிறப்பினால் சிவபாத சேகரனார் என்று அழைக்கப்பட்டான். அருள்மொழி வர்மன், க்ஷத்ரிய சிகாமணி, உயயக்கொண்டான் பாண்டிய குலாசனி, கேரளாந்தகன், ஜனநாதன் ரவிகுலமாணிக்கம், நிகரிலிசோழன் என்ற சிறப்புப் பெயர்களும் இராஜ ராஜனுக்கு உண்டு.

மாமன்னன் இராஜராஜன் முடிசூடிய ஆயிரமாண்டு வைபவம் அண்மையில் நடைபெற்றது. தமிழக அரசு ஆண்டு தோறும் ஐப்பசி சதயமான இராஜராஜன் பிறந்த நாள் விழாவை சிறப்புற நடத்திவருகிறது. வரலாற்று களஞ்சியமான தஞ்சையை வாசக நேயர்கள் கண்டு களிப்புறுவது அவசியமான ஒன்றாகும்.

★

# கலிங்கத்துப் பரணியில் திருமால்

பிற்காலச் சோழர்களின் காலம் முதல், தமிழில் எண்ணற்ற சிற்றிலக்கியங்கள் தோன்றின. அவ்வாறு தோன்றிய தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் பரணியும் ஒன்று: போரில் ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றிவாகை சூடிய தலைவனைப் பாராட்டி எழுவதே பரணியாகும். தமிழில் தோன்றிய பரணி நூல்களுள் கலிங்கத்துப் பரணி முதலாவதாகவும், தலை சிறந்ததாகவும் கருதப்படுகிறது. இது முதலாம் குலோத்துங்கனின் கலிங்க வெற்றியைச் சிறப்பிக்கின்றது. போருக்கே முதலிடம் கொடுக்கப்பட்டுள்ள இந்நூலில், சமயத்திற்கும் சிறப்பான இடம் அளிக்கப்பட்டுள்ளது.

**திருமால்:**

காக்கும் கடவுளான திருமாலின் பெருமையைக் கடவுள் வாழ்த்துப் பகுதியிலுள்ள இரண்டாவது பாடல் போற்றுகிறது. எந்தத் தாயின் வயிற்றிலும் விதிவசமாகத் தோன்றாமல், தன் விருப்பப்படியே தோன்றி, உலகையெல்லாம் அடக்கிக் காக்கும் ஒப்பற்ற வயிற்றையுடையவர் திருமால். அத்தகைய திருமாலின் வயிற்றைப் போல குலோத்துங்கனின் குடை இவ்வுலகு முழுதையும் தன்னுள் அடக்கி இனிது வாழ வேண்டும்.

"ஒரு வயிற்றில் பிறவாது பிறந்தருளி
உலகு ஒடுக்கும்
திருவயிற்று ஒரு குழவி திருநாமம்
பரவுதுமே!
அந்நெடுமால் உதரம் போல் அருள்
அபயம் தனிக் கவிகை
இந்நெடுமா நிலம் அனைத்தும்
பொதிந்து இனிது வாழ்க! என்றே"

இந்நூலில் பல பகுதிகளில் செயல்களுடன் ஒப்பிடப்பட்டுள்ளன. குலோத்துங்கன் திருமாலின் அவதாரமாகவே கருதப்படுகின்றான். 'இராச பாரம்பரியம்' என்ற பகுதியில் சோழர் குலத்திற்கு முதல் வராகத் திருமால் கருதப்படுகிறார். அரவுப் படுக்கையில் துயில் கொள்ளும் திருமால் அனைத்து வேள்விகளிலும் நிறைந்திருப்பவர்; அத்தகைய திருமால் தொடக்கமாக குலோத்துங்கன் காலம் வரை அமைந்த சோழர் வரலாற்றை நாரதர் கூறினார். அவர் கூறியவற்றைக் கரிகாலச் சோழன் இமயமலையில் எழுதினன்.

"அரணி வேள்வியில் அகப்படும்
அகண்ட உருவாய்
அரவு அணைத் துயிலும் ஆதிமுதலாக
அபயன்
தரணி காவல் அளவும் செல
மொழிந்து முனிவன்
தான் எழுந்தருள மொழிந்த படியே"

முதல்குலோத்துங்கனின் பிறப்பும், இளமைப் பருவமும் 'அவதாரம்' என்ற பகுதியில் விவரிக்கப்படுகின்றன. பண்டு திருமால் இராமாவதாரம் பூண்டு இலங்கையை அழித்தார்; பின்னர் கண்ணன் உருவில் மகாபாரதப் போரை நடைபெறச் செய்தார். ஒளி நிரம்பிய ஆழியை உடைய விசயதரன் எனும் குலோத்துங்கனாக அத்திருமாலே இன்று அவதரித்தார்.

"அன்று இலங்கை பொருது அழித்த
அவனே அப்
பாரதப் போர் முடித்துப் பின்னை
வென்று இலங்கு கதிர்ஆழி விசயதரன்
என உதித்தான், விளம்பக்
கேண்மின்"

திரு. எம். ராஜகோபாலன்,
சென்னை.

முன்பு தேவர்கள் அனைவரும் திருமாலிடம் வேண்டிக்கொண்டனர்; அவர்களின் குறைகளை நீக்கும் பொருட்டு வாசுதேவன், தேவகி ஆகிய இருவருக்கும் மகனாகத் திருமால் உதித்தார். அத்தகைய திருமாலே, உலகில் இருள் மறைந்து ஒளி பரவவும், சூரிய குலம் தழைத்து விளங்கவும் குலோத்துங்கனாக அவதரித்தார். முதலாம் இராசேந்திரன் மகளும், இலக்குமி தேவியைப் போன்றவருமான அம்மங்காதேவியே குலோத்துங்கனை ஈன்றாள்.

"இருள்முழுதும் அகற்றும் விதுகுலத்
தோன் தேவி
இகல்விளங்கு தபனகுலத்து இராச
ராசன்
அருள்திருவின் திருவயிற்றில் வந்து
தோன்றி
ஆல் இலையில் அவதரித்தான்!
அவனே மீள;"

அன்று வாசுதேவன் மகன் நிலமடந்தையில் துயர் களைந்ததைப்



காளீஸ்வரர் ஆலயம், காளையார் கோயில்



விருத்திகிரீஸ்வரர் ஆலயம், விருத்தாசலம்.

போல இந்தக் கண்ணனும் (குலோத்துங்கன்) நிலமகளின் துன்பத்தை நீக்குவான் என்று அனைவரும் அறியுமாறு குலோத்துங்கனுக்கு கதை, வில், வாள், சங்கு, சக்கரம் ஆகிய கண்ணனின் ஆயுதங்களைக் கோர்த்து, ஐம்படைத் தாலியாக அணிவித்தனர். சிவந்த நிறமுடைய கமலத்தில் குடிகொண்டுள்ள திருமகள் திருமாலின் மார்பில் இடம் பெற்றுள்ளாள். அந்த இலக்குமி தேவியின் திருக்கழுத்திலுள்ள மங்கல நாணைப் போல, குலோத்துங்கனின் மார்பில் முப்புரிநூல் துலங்க, அம்மன்னன் இரண்டாம் பிறப்படைந்து சிறப்புற்றான்.

திருமால் சிறிய உருவமும், நிரம்பிய அறிவும் பெற்ற வாமனராக உருவெடுத்து மாவலியிடம் மூன்றடி நிலத்தை யாசித்துப் பெற்றதுடன், அம்மன்னனின் ஆணவத்தையும் அடக்கினார். அந்த வாமனமூர்த்தி இயம்பிய நான்கு மறைகளையும் குலோத்துங்கன் வேதியரிடம் பயின்றான்.

"போதம் கொள் மாண் உருவாய்ப்
புவி இரந்த
அஞ்ஞான்று புகன்று சென்ற
வேதங்கள் நான்கினையும், வேதியர்
பால்
கேட்டருளி மீண்டும் கற்றே"

இத்துடன் நில்லாமல் போர்ப் பயிற்சியும் பல்கலைகளில் தேர்ச்சியும் பெற்ற குலோத்துங்கன் வயிராகரம், சக்கர கோட்டம் ஆகியவற்றை வென்று வடவரசரைப் பணியச் செய்தான். குலோத்துங்கனின் புகழ் என்னும் நிலவொளி கருமை, கொடுமை, துன்பம் ஆகிய தீக்குணங்களின் இருப்பிடமான இருளை வென்றது. அவ்வொளியில் ஆழ்கடல்கள் அனைத்தும் திருமால் அரவணைத் துயிலும் பாற்கடலை ஒத்தன.

"அரிதுயிலும்படி கடல்கள் அடைய
விளங்கின கவினின்
ஒரு கரு வெம்கலி கழுவி உலகு
பெரும் புகழ் நிழலில்"

'களம் பாடியது' என்ற பகுதியில் போர்க்களத்தில் இறப்புண்ட யானைகள் இரத்த வெள்ளத்தில் மிதக்கும் காட்சி வருணிக்கப்படுகிறது. குலோத்துங்கன் முன்பு இராமனாக அவதரித்தபோது கடலைப் பணியச் செய்யும் பொருட்டு வில்லை வளைத்தான். அக்கடலில் வானரர்கள் பெரிய மலைகளைக் குவித்து சேதுபந்தனம் அமைத்தனர். போரில் இரத்த வெள்ளத்தில் மிதக்கும் யானைகள், கடலில் மிதக்கும் மலைகளைப் போல இருந்தனவாம்.

புவி புரந்து அருள் செய்யும் சயதரன்
ஒருமுறைப்
புணரி மேல் அணைபடப் பொரு
வில்லில் குனிதலின்
கவிகுலம் கடலிடைச் சொரி பெரும்
சிரி எனக்
கரிகளின் பிணம் இதில் காண்மினோ
காண்மினோ.

குலோத்துங்கனின் வலிமையுள்ள தோள்கள் இப்புவியைத் தாங்குவதால் ஆதிசேடன் தனது சுமை நீங்கப் பெற்றான். அவனுடைய திரண்ட பருத்த பல தோள்கள் முற்காலத்தில் அமுதம் உண்டாகுமாறு பாற்கடலைக் கடைந்தன. குலோத்துங்கனின் மிகப் பெரிய கரங்கள் முன்னொரு நாள் வாணாசுரனின் ஆயிரம் கரங்களை வெட்டின. முன்பு அவன் பாண்டவர் பொருட்டு துரியோதனனிடம் தூது சென்ற போது அவனது எண்ணற்ற கரங்கள் சக்கரம் முதலிய படைக்கலங்களை ஏந்தின. இவ்வாறு திருமால் புரிந்த செயல்களை குலோத்துங்கனுடன் ஒப்புமைப் படுத்துவதன் மூலம் குலோத்துங்கன் திருமாலின் அவதாரம் என்பதைத் தெளிய வைக்கிறார் ஆசிரியர்.

கொற்றவை :

பரணி என்ற நாள்மீன் காளியைத் தன் தெய்வமாகப் பெற்றமையால் அந்நாள்மீனின் பெயராலேயே பரணி என்ற இலக்கிய வகை தோன்றியது என்ற கருத்து உண்டு. கலிங்கத்துப் பரணியில் கொற்றவைக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. கடவுள் வாழ்த்துப் பகுதியில் கொற்றவை வாழ்த்துப் பாடல் உள்ளது. சேரனையும் பாண்டியனையும் வென்ற குலோத்துங்கன் வாழ்க என்று, காமவேளின் கரும்புவில் நெருங்கவியலாக திருவடிகளை உடைய கொற்றவையை வணங்குவோம் என்று அப்பகுதி தெரிவிக்கிறது.

'கோயில் பாடியது' என்ற பகுதியில் காளியின் கோயில் விவரிக்கப்படுகிறது. 'காளியைப் பாடியது' என்ற பகுதியில் காளியின் இயல்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன. காளியின் படையைச் சேர்ந்த பற்பல பேய்களைப் பற்றி, நகைச்சுவை உணர்வு தோன்றும் வண்ணம் வருணனைகள் உள்ளன.

பிறர்:

கடவுள் வாழ்த்துப் பகுதியில் சிவபெருமான், நான்முகன், கலைவாணி, கணபதி, முருகவேள், சப்தமாதர், கதிரவன் ஆகியோர்மீது வாழ்த்துப் பாடல்கள் உள்ளன. பல இடங்களில் சிவபெருமானின் வீரச் செயல்களும் தேவர்களின் செயல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வாறு வெறும் போர் பற்றிய நூலாக மட்டுமின்றி, சமயத்திற்குச் சிறப்பான இடத்தையும் கலிங்கத்துப்பரணி அளித்துள்ளது.

★

# ஆந்திர தேசத்தில் அந்தர்யாமி!

இந்தியாவின் பாரம்பரியமும், கலாசாரமும் கோயில்களில்தான் உள்ளது என்று சொன்னால் அது மிகையாகாது. ஒரு புராதானக் கோயிலின் அமைப்பை மனித சரீரத்துடன் ஒப்பிடலாம். கோயிலின் கும்பம் நம் தலைக்கு ஒப்பாகும். கர்ப்பக்கிருஹம்—கழுத்து; மண்டபம் — வயிறு; பிரகாரத்தின் சுவர்கள்—நம் கால்கள்; கோபுரம் —பாதம்; மூலவிக்ரஹம் — ஜீவனாகும்.

மூலவர் ஸன்னதி என்று நாம் குறிப்பிடுவது, ஆகம சாஸ்திர சம்ப்பிரதாயங்களுடன் இறைவனைப் பிரதிஷ்டை செய்து, அந்த இறைவனின் ஸூக்ஷ்ம ரூபமாய் பூஜிக்கப் படும் ஸன்னதியாகும். இந்த ரூபத்திலேயே, இறைவன் தன்னைப் பூஜிப்பவர்களுக்குக் கருணையை வாரி வழங்கும் வள்ளலாகத் திகழ்கிறான்.

ஸர்வ வல்லமையும் படைத்து, அகிலத்தையும் ஆட்சி செய்து அண்ட சராசரங்களையும் தன் ஆணைக்குள் அடக்கி ஆளும் அந்தர்யாமியாக ஆந்திர தேசத்தின் திருவேங்கடத் திருமலையில் திவ்விய ரூபமாக தினமும் காட்சி தருகிறான் திருவேங்கடன் என்னும் திருமகள் போற்றும் திருமலைவாசன்.

ஸ்ரீஅப்பய்ய தீக்ஷிதர் காலத்தில் வாழ்ந்த மகான் ஒருவர் கீழ்க்கண்ட ஸ்லோகத்தின் மூலம் ஆந்திரதேசத்தின் பெருமையைக் குறிப்பிடுகின்றார். இதனை ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரே இயற்றி இருக்க வேண்டும் என்ற நம்பிக்கையும் உண்டு.

आन्ध्रत्वमान्ध्रभाषा च प्राभाकरपरिश्रमः।
तत्राऽपि याजुषी शाखा नाल्पस्य तपसः फलम् ॥

"ஒருவன் மிகுந்த தவப்பயனின் காரணமாகவும், நற்கருமங்களின் பலனாகவும் மட்டுமே, ஆந்திர தேசத்தில் பிறக்க முடியும்; ஆந்திர பாஷையைத் தாய்மொழியாகக் கொள்ள முடியும்; பிரபாகரரின் மீமாம்ஸ சாஸ்திரங்களைக் கற்றுணர முடியும்; யஜுர் சாஸ்திரங்களைக் கடைபிடிக்க முடியும்" என்று கூறுகிறார். இதனை விளக்கிக் கூறுகையில், "ஆந்திர தேசமென்பது மூன்று பிரசித்தி பெற்ற சிவலிங்கக்கோயில்களின் மத்தியில் இருப்பதால், முன்பெல்லாம் "திரிலிங்க தேச"மென்றே வழங்கி வந்தது; அங்கு வாழ்ந்த மக்களையும் "திரிலிங்கர்கள்" என்றே குறிப்பிட்டு வந்தனர்: அப்படிப்பட்ட அந்த இடமே புனிதத்தன்மையின் இருப்பிடம்; அவர்கள் பேசும் மொழியே இனிமையின் சிகரம்" என்றெல்லாம் குறிப்பிடுகின்றார்.

மேலும், பக்தர்களின் குறைகளைப் போக்கவும், அவர்களுக்கு இக பர சுகங்களை நல்கவும், வேண்டியதை வேண்டியவர்க்கு வேண்டியபடி தந்திடும் வேங்கடநாதனைக் காட்சி தரவும், ஆந்திர தேசத்தின் திருமலையைத் தானே தேர்ந்தெடுத்துள்ளார் திருமால் என்று புராணங்கள் கூறுகின்றன. அது மட்டுமில்லாமல், தமிழ்ச்சங்க இலக்கியங்களும் ஆந்திர தேசத்தின் வர்ணனை பற்றியும், திருமலையின் புனிதத் தன்மையைப் பற்றியும் எடுத்து இயம்புகின்றன. எனவே தான் இக்கட்டுரையை "ஆந்திர தேசத்தில் அந்தர்யாமி" என்று குறிப்பிட்டுள்ளேன்; இத் தலைப்பு இறைவனுக்கு மிகவும் பொருத்தமே!

A. N. மாதவன், B.SC., A.C.A.
சென்னை-20.

உலகத்தில் உள்ள அனைத்து பக்தர்களையும் தன்பால் அரவணைத்துக் காத்திடும் ஒப்பற்ற இறைவன், ஆந்திரதேசத்தில் அந்தர்யாமியாகத் திகழும் திருவேங்கடன் ஒருவனே! அவனைப் பாலாஜி என்றும், ஸ்ரீநிவாஸன் என்றும், வேங்கடேசன் என்றும், மற்றும் "கோவிந்தா, கோவிந்தா" வென்றும் குறிப்பிடுவதுண்டு!

முதற்கண், மலை இல்லத்தை இறைவன் தேர்ந்தெடுத்ததைப் பற்றியும் அதிலும் "ஏழு" மலைகளைச் சூழ்ந்து நிற்பதைப் பற்றியும் சுருக்கமாகப் பார்ப்போம்.

அவ்வேழு மலைகள் முறையே விருஷபாத்திரி, விருஷாத்ரி, கருடாத்ரி, அஞ்சனாத்ரி, ஸேஷாத்ரி, வேங்கடாத்ரி, நாராயணாத்ரி என்று வழங்கப்படுகிறது.

"அத்ரி" என்றால் மலை; மலைகளைத் தேர்ந்தெடுத்ததின் மூலம் இறைவன் ஏகாந்தத்தையே விரும்புகிறான் என்று புலப்படுகிறது. மேலும் "தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்" என்று வேதம் கூறுகிறது. அதாவது தர்ம தத்துவங்கள் மலைகளிலேயே விளங்குகிறது என்று பொருள் படுகிறது. அனைத்து வேதங்களின் சாரமாகவே இறைவன் இருப்பதனால், அதை உணரச் செய்யும் மலையைத் தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளான் இறைவன் என்பதை நினைக்கும் போது நம் உடல் சிலிர்க்கிறது; மேலும், ஒரே ஒரு மலையைத் தழுவி நின்றால் போதாதா? இறைவன் ஏழு மலைகளில் தன்னை லயித்து நிற்கக் காரணமென்ன?

சான்றாக காயத்ரீ மஹாமந்திரத்தை எடுத்துக் கொள்ளலாம்;



**ஸ்ரீபசுபதீஸ்வரர் கோயில், கரூர். இது கொங்கேழு ஸ்தலங்களில் முதலாவதாகும். அம்பாள் (இருவர்) சவுந்தரநாயகி, அலங்காரவல்லி.**
**திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி - கோவை.**

எங்கும் வியாபித்து நிற்கும் பரம் பொருளின் பாதங்களை அடைய சாதகன் காயத்ரீ மஹா மந்திரம் மூலம் அனுதினமும் தன் புத்தியை தூண்டச்செய்து, அறிவை விசாலப்படுத்தி இறைவனின் பாதங்களை அடைய வேண்டுகின்றான். ஆனால், அந்த முக்தி நிலையை அடைய அவன் ஏழு நிலைகளைக் கடக்க வேண்டுமென்று வேதம் நமக்கு எடுத்துக்காட்டுகிறது: அந்த ஏழு நிலைகளை, பூ:, புவ:, சுவ:, மஹ:, ஜன:, தப:, ஸத்யம் என்ற சப்த வ்யாஹ்ருதிகளாகக் குறிப்பிடுகிறார்கள். இந்த ஏழுநிலைகளையும் கடந்து, இறைவனை அடைய நம் உடலில் உள்ள ஏழு சக்கரங்களைத் தூண்டி விட்டு, அதன் சக்தியால் நாம் உயரவேண்டும். அந்தச் சக்கரங்கள் மூலாதாரத்தில் தொடங்கி, ஸ்வதிஷ்டானம், மணி பூரகம், அனாஹதம், விசுத்தம், ஆக்ஞா என்ற நிலைகளைக் கடந்து கடைசியில் சகஸ்ராரத்தில் லயித்து விடுகிறது. இதுவே பரம் பொருளைப் பற்றும் எளிய மோக்ஷ ஸாதனம்.

இவ்வேழு நிலைகளைக் குறிப்பதே, ஏழு மலைகளின் தத்துவங்களாகும். எனவே ''ஏழு'' என்னும் எண்ணிக்கை நமது ஆத்ம ஞானத்தை சீரான பாதையில் செலுத்தும் முக்தி நிலைகளின் ஏழு படிகளாகும். மேலும், இவ்வேழு மலைகளும் வேத சொருபமான பரதத்துவத்தின் ஆதாரமாகப் பெயரிடப்பட்டமையால், அவை அனைத்தும் காரணப் பெயர்களே! இவ்வேழு மலைகளும் ஆத்மாவின் ஆன்மீகப் பாதையில் ஆண்டவனை அடைய வழிசெய்யும் ஏழுபடிகளாகும்.

வேதத்தின் சுவைப் பயனைத் தெளிந்து, ஜீவன் என்னும் நம் ஆத்மா, தன்னுடைய இப்பாதையில் நற்காரியங்களின் மூலமாகவும், தர்மங்களின் மூலமாகவும் தன்னைச் சுத்தி செய்து, இறைவனின் ஒப்பற்ற ஞானத்தைத் தெளிவாக உணர்ந்த பிறகு, ''தான் என்பது இவ்வுடலல்ல; உள்ளே இருக்கும் ஆத்மா'' என்ற பூரண ஞானம் அடையப் பெற்று, கடைசியில் அந்தர்யாமியான அந்த இறைவனின் பாதங்களைச் சரணடைந்து மோக்ஷத்தை அடைய உதவும் அருமையான வழிகளாகும். அந்த ஏழு வழிகளையும் குறிப்பிடுவதே ஆந்திர தேசத்தில் உள்ள ஏழு மலைகள். அங்கு இறைவன் வாழும் இருப்பிடமே திருமலை; அதுவே முக்தி நிலையின் கடைசி எல்லை.

இப்படிப்பட்ட ஒப்பற்ற உயர்வு நிலைக்கு நம்மை அழைத்துச் செல்லவே கலியுகவரதனாய், ஸ்ரீமந் நாராயணன் திருவேங்கடத்தில் தன்னிச்சையாகவே அவதரித்துள்ளார்.

இப்போது ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் பாடலை நினைவு கூர்ந்து பாருங்கள்! ஆந்திரதேசம் எவ்வளவு புனிதமான தேசம் என்பது புலனாகும்! ●



**திருக்குற்றால மலையில் ஐந்தருவி குளியல்**
**திரு. எஸ். ஜி. சேஷகிரி - கோவை.**

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

